جوانی کیسے گزاریں؟ (Tamil)

# வாலிபத்தை எவ்வாறு கழிப்பது ?




தொகுப்பு :

மஜ்லிஸ் அல் மதீனதுல் இல்மிய்யா

தமிழ் மொழிபெயர்ப்பு :

தர்ஜுமா மஜ்லிஸ் (தஃவதே இஸ்லாமி)

# வாலிபத்தை எவ்வாறு கழிப்பது?

ஷெய்கெ தரீகத், அமீரெ அஹ்லுஸ் ஸுன்னத், தஃவதே இஸ்லாமியின் ஸ்தாபகர் ஹழ்ரத் அல்லாமா மௌலானா அபூ Bபிலால் **முஹம்மத் இல்யாஸ் அத்தார் காதிரி ரZஸவி** دَامَتْ بَرَکَاتُہُمُ الْعَالِیَہ அவர்கள் ஹிஜ்ரி 1412 ரபீஉல் அவ்வல் 18 – 1991 செப்டம்பர் 26 இல் தஃவதே இஸ்லாமியின் முதலாவது மதனி மர்கஸான (குலிஸ்தானெ ஒகாDட்வி, Bபாபுல் மதீனா, கராச்சியில் அமைந்துள்ள) ஜாமி மஸ்ஜித் குல்Zஸாரெ ஹபீபில் வியாழக்கிழமை சுன்னத்துக்கள் நிறைந்த வாராந்த இஜ்திமாவில் **“வாலிபத்தின் இபாதத்துடைய மகிமை”** எனும் தலைப்பில் பயான் செய்தார்கள். அதன் உதவியோடு மேலதிக விடயங்களையும் இணைத்து அல் மதீனதுல் இல்மிய்யா இச்சிறுநூலை உருதுமொழியில் தொகுத்துள்ளது. மொழிபெயர்ப்பு மஜ்லிஸ் அதை தமிழில் மொழிபெயர்த்துள்ளது. இதன் மொழிபெயர்ப்பிலோ அல்லது அச்சுக்கோவையிலோ ஏதாவது தவறுகள் தென்பட்டால் பின்வரும் முகவரியில் அமைந்துள்ள மொழிபெயர்ப்பு மஜ்லிஸோடு தொடர்பு கொண்டு நற்கூலியைப் பெற்றுக்கொள்ளுங்கள்.

**குறிப்பு :–** இதில் வரும் ஷரீஆ சட்டங்கள் யாவும் ஹனஃபி மத்ஹபின் படியே எழுதப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது.

**Majlis-e-Tarajim (Dawat-e-Islami)**

Aalami Madani Markaz, Faizan-e-Madinah, Mahallah Saudagran, Purani Sabzi Mandi, Bab-ul-Madinah, Karachi, Pakistan

**UAN:** ☎ +92-21-111-25-26-92 – Ext. 1262

**Email:** 🖃 translation@dawateislami.net

# வாலிபத்தை எவ்வாறு கழிப்பது?

"வாலிபத்தை எவ்வாறு கழிப்பது" என்பதன் தமிழ் மொழிபெயர்ப்பு

◆



**ஆரம்ப வெளியீடு:** ஸஃபர், ஹிஜ்ரி 1437 (நவம்பர், 2015)

**வெளியீட்டாளர்:** மக்தBபதுல் மதீனா

**Quantity:**

**ISBN:**

**அனுசரணை**:

உங்களின் மரணித்த குடும்ப அங்கத்தவருக்காக ஒரு நூலையோ அல்லது ஒரு சிறுநூலையோ அச்சிட்டு ஈஸாலே ஸவாBபுக்காக அனுசரணை செய்ய விரும்பினால் எம்மோடு தொடர்பு கொள்ளுங்கள்.

## Maktaba-tul-Madinah

Aalami Madani Markaz, Faizan-e-Madinah Mahallah Saudagran,
Purani Sabzi Mandi, Bab-ul-Madinah, Karachi, Pakistan

✍ **Email:** maktabaglobal@dawateislami.net– maktaba@dawateislami.net

✆ **Phone:** +92-21-34921389-93 – 34126999

💻 **Web:** www.dawateislami.net

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى سَيِّدِ الْمُرْسَلِيْنَ
اَمَّا بَعْدُ فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ؕ بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ؕ

# புத்தகம் வாசிக்கும்போது ஓதும் துஆ

இஸ்லாமிய புத்தகங்களையோ அல்லது பாடங்களையோ வாசிக்கும்போது பின்வரும் துஆவை ஓதிக்கொள்ளவும். اِنْ شَآءَ اللّٰه عَزَّوَجَلَّ வாசிப்பவைகள் ஞாபகத்தில் இருக்கும்.

اَللّٰهُمَّ افْتَحْ عَلَيْنَا حِكْمَتَكَ وَانْشُرْ
عَلَيْنَا رَحْمَتَكَ يَا ذَا الْجَلَالِ وَالْاِكْرَام

யா அல்லாஹ் عَزَّوَجَلَّ! அறிவு ஞானத்தின் வாயிலை நமக்காக திறந்து விடுவாயாக. மேலும் நமக்கு ரஹ்மத்துடைய கதவுகளை திறந்து விடுவாயாக கண்ணியமும், உயர்வும் உடையவனே!

(அல்முஸ்தத்ரஃப், பாகம் 1, பக்கம் 40, தாருல் ஃபிக்ர் பேரூத்)

(ஆரம்பத்திலும், கடைசியிலும் ஒரு தடவை ஸலவாத் ஓதிக்கொள்ளவும்)

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِيْنَ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰى سَيِّدِ الْمُرْسَلِيْنَ
اَمَّا بَعْدُ فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّيْطٰنِ الرَّجِيْمِ ؕ بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ ؕ

# வாலிபத்தை எவ்வாறு கழிப்பது?

ஷைத்தான் எவ்வளவு சோம்பலை உண்டாக்கினாலும் இச்சிறுநூலை முழுமையாக வாசியுங்கள், اِنْ شَآءَاللّٰه عَزَّوَجَلَّ நன்மைகளை பெற்றுக் கொள்வதோடு, வாலிபத்தின் இபாதத் மற்றும் அதன் முக்கியத் துவத்தை அறியும் சந்தர்ப்பமும் கிடைக்கும்.

## ஸலவாத்தின் சிறப்பு

மக்கத்து மாமன்னர், மதீனத்து மாவேந்தர் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் நவின்றுள்ளார்கள். மனிதர்களே! நிச்சயமாக கியாமத் நாளன்று அதனுடைய அச்சம் மற்றும் கேள்வி கணக்கிலிருந்து உங்களில் அவசரமாக விடுதலை பெறுபவர் யாரென்றால், இவ்வுலகில் என்மீது அதிகமாக ஸலவாத் ஓதியவராவார்.

(ஜம்உல் ஜவாமிஃ, 9/129, ஹதீஸ் 27686, முக்தஸரன்)

மஹ்ஷரின் கடும் இருளில் நூராகும், ஒளிக்கதிர் ஸலவாத்
ஸலவாத்தை விடாதே சுவன வழிகாட்டி ஸலவாத்

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபத்தை தேடுதல்

ஒரு சம்பவம் கூறப்படுகிறது: ஒரு வயோதிபர் எங்கோ செல்கிறார், வயோதிபத்தின் காரணமாக அவருடைய இடுப்பு வலைந்திருந்தது. அதாவது அவர் நடக்கும்போது தரையில் ஏதோ தேடுவதுபோல் இருக்கும். ஒரு வாலிபன் கோமாளித் தனத்துடன், பெரியவரே என்ன தேடுகிறீர்? எனக்கேட்டான், அவனுடைய பேச்சு கோபத்தை ஏற்படுத் தக்கூடியதாக இருந்தாலும், அந்த வயோதிபர் பொறுமை யுடன் புத்திசாலித் தனத்தை வெளிப்படுத்தினார். மேலும் கேலிக்கிண்டல் நிறைந்த அந்த கேள்விக்கு பதிலாக சிந்தனைமிக்க மதனி முத்துக்களை பொழிந்தவாறு கூறி னார், “மகனே! நான் எனது வாலிபத்தை தேடுகிறேன்.” கடினமான வார்த்தைக்கு பதிலாக வியப்பை ஏற்படுத்திய பதிலை கேட்ட அந்த வாலிபன் திடுக்கிட்டு சொன்னான்.

பெரியவரே! உங்களின் பேச்சு விளங்கவில்லை, வாலிபத்தை எப்போதாவது தேடமுடியுமா? மேலும் அது ஒரு முறை மறைந்து எப்போதாவது யாருக்காவது மீண்டும் கிடைத் துள்ளதா? அப்போது அவர் கூறினார், மகனே! கைசேதம் இதுவே! அதாவது என்னிடம் வாலிபத்தின் அருட்கொடை இருந்தபோது, அதை கவனிக்காமல் விட்டு விட்டேன், இன்று நான் அதை இழந்து விட்டதால் அதன் முக்கியத் துவம் விளங்குகிறது. ஆஹ்! எனக்கு வாலிப காலம் மீண்டும் கிடைக்குமானால் கடந்த காலத்தில் நடைபெற்ற

தவறுகளுக்கும், குறைகளுக்கும் மன்னிப்பு கேட்பதோடு, நல்ல முறையில் அல்லாஹ் عَزَّوَجَلَّ வை இபாதத் செய்வேனே!

اَلَا لَيْتَ الشَّبَابَ يَعُـوْدُ يَوْمًـا     فَاُخْبِرُهُ بِمَـا فَعَـلَ الْمَشِـيْبُ

அதாவது ஆஹ்! எனது வாலிபம் திரும்பி வந்தால், வயோதிபம் என்னோடு எவ்வாறு நடந்து கொண்டது என்பதை நான் அதனிடம் கூறுவேன்.

பின்பு ஆஹ் என்று தனது உள்ளத்திலிருந்து வேதனையை வெளியாக்கியவாறு கூறினார், கைசேதமே! நான் எனது வாலிபத்தின் செல்வத்தை வீணாக்கி விட்டேனே! ஆனால், “இப்போது கைசேதப்பட்டு என்ன பயன்?” நான் வாலிபத்தின் மதிப்பை அறியவில்லை, அந்நேரத்தில் நன்மையும் செய்யவில்லை, மறுமைக்கான ஆயத்தமும் செய்யவில்லை. அப்படியே எனது வாலிபம் பராமுகமாகவே கழிந்து, இப்போது வயோதிபம் வந்துவிட்டது, உடல்நலம் பலவீனமாகி, உடம்பு உறுதியற்றதாகி விட்டது. அதிகமாக இபாதத் செய்ய ஆசை ஏற்படுகிறது, ஆனால் வயோதிபத்தின் காரணத்தால் துணிச்சல் இல்லாமல் போய்விட்டது.

பிறகு அந்த வயோதிபர் தனித்துவ முயற்சியை மேற்கொண்டவாறு அந்த வாலிபனுக்கு கூறினார். மகனே! அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய கிருபையைக்கொண்டு நீர் இப்போது வாலிபனாக இருக்கின்றீர், அதன்மூலம் பிரயோஜனத்தை

பெற்றுக்கொள். இபாதத் செய்ய ஆயத்தமாகிக் கொள். இடுப்பு வளைவதற்கு முன் அல்லாஹுதஆலாவின் சன்னிதானத்தில் சிரம் சாய்த்துக்கொள். இல்லையெனில் வயோபத்தில் என்னைப்போல் இடுப்பை வளைத்துக் கொண்டு வாலிபத்தை தேடிக்கொண்டிருப்பாய். ஆனால் துன்ப, துயரத்தை தவிர வேறொன்றும் கிடைக்காது. கைசேதம் கிடைத்துக் கொண்டிருக்குமே தவிர கையில் ஒன்றும் வரப்போவதில்லை. மேலும் நிலைமை இவ்வாறு தான் தெரியும், “சிறுபராயம் விளையாட்டில் கழிந்தது, வாலிபம் தூக்கத்தில் சென்றது, வயோதிபம் பார்த்து அழுதது.” இந்த உபதேசம் நிறைந்த, கருணைமிக்க கலந்துரையாடலும் மேலும் தனித்துவ முயற்சியுடைய மதனி முத்துக்களின் நறுமணமும் அந்த வாளிபனின் உள்ளத்தையும், சிந்தனையையும் மனமாக்கியதோடு, அவனின் உள்ளத்தில் தாக்கத்தை ஏற்படுத்தி விட்டது. கொஞ்ச நேரத்திற்கு முன் அந்த வயோதிபருக்கு ஏளனத்தின் அம்பை செலுத்திய அந்த வாலிபர், தனித்துவ முயற்சியால் கவரப்பட்டு, இப்போது அந்த வயோதிபருக்கு முன்னால், இனிமேல் வாலிபத்தை மதித்து, பேணுதலாக வாழ்வேன் என உறுதியளித்தார்.

அஃலா ஹழ்ரத்தின் புதல்வர், முஃப்தியெ அஃலம் ஹிந்த் மௌலானா முஸ்தஃபா ரZஸாகான் عَلَيْهِ رَحْمَةُ الرَّحْمٰن அவர்கள் தனது கஸீதா நூலாகிய “ஸாமானே பக்ஸிஷில்” வாலிபத்தின் முக்கியத்துவத்தைப்பற்றி படிப்பினையூட்டும்போது கூறுகிறார்கள்.

வழிப்பாட்டிற்கு காலம் இதுவே
வயோதிபத்தில் துணிவு எங்கே

செய்வதானால் செய்துகொள் தற்போது
இளம் வாலிபராகும் நீ இப்போது

صَلُّوْا عَلَی الْحَبِیْب     صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

## கல்லுக்கு பதிலாக மலரை முன் வையுங்கள்!

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! மேற்கூறப்பட்ட ஹிக்மத் நிறைந்த சம்பவத்தில் படிப்பினைகள் மற்றும் நல்லுபதேசங்கள் அடங்கிய பல மதனி முத்துக்கள் உள்ளடக் கப்பட்டுள்ளன. அதில் ஒரு மதனி முத்து இதுவாகும். அதாவது, யாராவது உங்களுடன் அவமரியாதையாகவும், ஏளனமான முறையிலும் நடந்துக் கொண்டால், கல்லுக்கு பதிலடி கல்லால் அடிக்காமல் பொறுமையுடன் நடந்து கொள்ளுங்கள். சந்தர்பத்திற்கு ஏற்றவாறு நல்ல முறையில் விளங்கப்படுத்துவதற்கு முயற்சி செய்யுங்கள். மேலும் விசமுட்களுக்கு பதிலாக மதனி முத்துக்களை முன் வைப்பதன் மூலம் اِنْ شَآءَاللّٰہ عَزَّوَجَلَّ மதனி பிரயோஜனம் கிடைக்கும். அது மாத்திரமல்ல, **நான் என்னையும் உலக மக்கள் அனைவரையும் சீர்திருத்துவதற்கு முயற்சி செய்வேன்** اِنْ شَآءَاللّٰہ عَزَّوَجَلَّ எனும் மதனி நோக்கத்தின் பாதையை இலேசாக்குவதுடன், மதனி மாற்றத்தையும் ஏற்படுத்தும்.

பின்தங்கிடாதே ஒருபோதும் அருமை முபல்லிஹே
ஷைத்தானின் தாக்குதலை முறியடித்து விடு

صَلُّوْا عَلَى الْحَبِیْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## நன்மையின்பால் அழைப்பை பரப்புங்கள்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! இச்சம்பவத்தால் இந்த மதனி முத்தும் கிடைத்தது. அதாவது முஸ்லிம்களுக்கு விளங்கப்படுத்துவதிலும் மேலும் "நன்மையின்பால் அழைப்பை" பரப்புவதிலும் முயற்சி செய்துக்கொண்டே இருக்க வேண்டும். ஏனெனில் இதில் தனது மற்றும் ஏனைய இஸ்லாமிய சகோதரர்களின் மார்க்க இன்னும் உலக நன்மைகள் அடங்கியுள்ளது. 27ஆம் ஜுஸ்உ, ஸூரதுத் தாரியாத், 55ஆம் வசனத்தில் அல்லாஹ் عَزَّوَجَلَّ கூறுகிறான்.

وَ ذَكِّرْ فَاِنَّ الذِّكْرٰى تَنْفَعُ الْمُؤْمِنِیْنَ ﴿۵۵﴾

தர்ஜுமா கன்Zஸுல் ஈமான்: இன்னும் நல்லுபதேசம் செய்யுங்கள், ஏனென்றால், நல்லுபதேசம் முஸ்லிம்களுக்கு பயனளிக்கும்.

எனக்கு ஆர்வத்தை தாருங்கள் அண்ணலே
நலவின்பால் அனைவரையும் அழைக்க அண்ணலே

என்னையும் நன்னடத்தை உடையவனாக்குங்கள்
ரஹ்மத்தின் நபியே உம்மத்தின் பரிந்துரையாளரே

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## கிடைக்கும் நேரத்தை பிரயோஜனப்படுத்துங்கள்

நேரத்தின் மதிப்பை அறியாமல் இருத்தல் கடைசியில் கைசேதத்தையே ஏற்படுத்தும் என்பதும் இந்த சம்பவத்தி லிருந்து தெரிய வருகிறது. அதாவது குறிப்பாக வாலிப காலத்தை சிந்திக்காமல், பொருட்படுத்தாமல், மேலும் இந்த நல்ல நேரத்தை மதிக்காமல் இருப்பது, வயோதிபத்தில் கவலைப்படுவதற்கு காரணமாக ஆகிவிடுகிறது. ஏனெனில் யாருடைய வாலிபத்தின் பயணம் பாவங்களின் இருளில் கழிகிறதோ, அவர் வயோதிபத்தில் நன்மைகளின் வெளிச்சத்தின் பக்கம் திரும்பும்போது மிக தாமதமாகி இருக்கும். மேலும் அந்நேரத்தில் மனிதன் ஏதாவது செய்ய நாடினாலும் உடல், உறுப்புக்களில் பலவீனம் மற்றும் மோசமான உடல்நலம் துணிச்சலை இல்லாமல் ஆக்கிவிடும்.

ஆகவே எதுவரை வாலிபத்தின் அருட்கொடை மற்றும் உடல் ஆரோக்கியம் உள்ளதோ, அவைகளை பெறுமதியாக நினைத்து அதிகதிகமாக இபாதத்தும், நல்ல காரியங்களின் பழக்கத்தில் உறுதிப்பாட்டையும் ஏற்படுத்த முயற்சி செய்யுங்கள். மேலும் இன்று நன்மைகளிலிருந்து மனதை திருப்பி, கெடுதியின் பக்கம் மனதை செலுத்தி உற்சாகம்,

திறமை இன்னும் நேரத்தின் அருட்கொடையை இல்லாமல் ஆக்கிக் கொண்டால் நாளை கவலைப்பட வேண்டிவரும். அந்நேரத்தில் கவலை மற்றும் கைசேதப்படுவதால் எவ்வித பிரயோஜனமும் கிடைக்காது. நேரத்தின் கூர்மை நமது இரவு பகலை அதிவேகமாக வெட்டிச்செல்கிறது.

நேரத்தின் கடிவாளம் யாருடைய கையில் எப்பொழுது வந்துள்ளது! மேலும் நேரத்தின் வாகனத்துக்கு கொஞ்சம் மெதுவாக செல் என யாரால் கூறமுடியும்! ஆகையால் இன்று நேரத்தை மதித்து, அதிலிருந்து பிரயோஜனத்தை பெற்றுக்கொள்ளுங்கள். இல்லையெனில் சென்ற நேரம் ஞாபகத்தில் வருமே தவிர கையில் வராது.

எந்நேரமும் சுகவாழ்வை காலம் காட்டுவதில்லை
சென்ற நேரம் திரும்பி வரப்போவதில்லை

صَلُّوْا عَلَى الْحَبِيْب　　صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபத்தின் வரைவிலக்கணம்

தஃவதே இஸ்லாமியின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனா வினால் அச்சிடப்பட்ட 1548 பக்கங்கள் அடங்கிய “பைZஸானே சுன்னத்” எனும் நூலின் முதலாம் பாகம் 713 ஆம் பக்கத்தில் வந்துள்ளது. “லுஙத் (இலக்கியம்) உடைய கிதாபுகளின் படி (பருவ வயதை அடைந்ததிலிருந்து) 30 அல்லது 40 வருடம் வரை மனிதன் வாலிபனாக

இருக்கிறான். 30 அல்லது 50 வருடம் வாலிபத்திற்கும், வயோதிபத்திற்கும் இடையிலுள்ள ஓய்வாகும். அதாவது நடுத்தர வயதாகும். அதன்பின் வயோதிபம் வந்து விடும்.”

## குர்ஆனின் மகிமையும், வாலிபமும்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! மூளை மற்றும் உடல் ஆற்றலைக்கொண்டு சரியான முறையில் வாலிபத்தி லேயே வேலை எடுக்க முடியும். மார்க்க அறிவை கற்றுக் கொள்வதும், அதை மீட்டிக்கொள்ளும் வயதும் வாலிபமே ஆகும். வயோதிபத்தில் புத்தி மற்றும் அறிவுடைய சக்திகள் அநேகமாக பிரயோஜனமின்றி போய் விடும், சிந்திக்கும் ஆற்றலும் குறைந்து விடும், ஞாபக சக்தியின் புதையல் வெறுமையாகி விடும். மூளைக் கோலாறுகள் ஏற்படுவதன் காரணமாக மனிதன் சிறு பிள்ளைகளைப்போல் செயல்களை செய்ய ஆரம்பிக்கிறான். அதனால் சிலசமயம் சிரிப்பை உண்டாக்கும் செயல்கள் நடைபெற்று, அறியாமலேயே சிரிப்பும் வந்து விடுகிறது. ஆனால் குர்ஆன் ஓதுவதை வழக்கமாக்கிக் கொண்டுள்ள வாலிபருக்கு நற்செய்தி என்னவென்றால், அவருக்கு வயோதிபம் வந்தாலும் இப்படியான சோதனைகள் மற்றும் கஷ்டங்களிலிருந்து பாதுகாப்பாக இருப்பார். எவ்வாறெனில்,

பிரசித்திபெற்ற விரிவுரையாளர், ஹகீமுல் உம்மத், முஃப்தி அஹ்மத் யார் கான் நஈமி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الغَنِی அவர்கள் குறிப்பிடுகி றார்கள். “ஹழ்ரத் ஸய்யிதுனா இக்ரிமா رَضِیَ اللہُ تَعَالٰی عَنْهُ அவர்கள்

கூறுகிறார்கள். எந்த முஸ்லிம் குர்ஆன் ஓதுவதை பழக்கமாக்கிக் கொண்டாரோ, அவருக்கு اِنْ شَآءَاللّٰہ عَزَّوَجَلَّ இந்த (அதாவது வாலிபத்தில் பெற்ற அறிவை வயோதி பத்தில் மறக்கும்) நிலைமை ஏற்பட மாட்டாது.”

(நூருல் இர்பான், பாகம் 17, சூரதுல் ஹஜ், 5ஆம் ஆயத்திலிருந்து)

படம், நாடகத்திலிருந்து வெறுப்பை தா இறைவா
கஸீதா, குர்ஆன் ஓதலின் ஆசையை தா இறைவா

صَلُّوْا عَلَی الْحَبِیْب　　صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

## வாலிபத்தின் இபாதத் வயோதிபத்தில் பாதுகாப்புக்குக் காரணம்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! குர்ஆன் ஓதக் கூடிய வாலிபன் வயோதிபத்தை அடைந்தாலும், குர்ஆன் ஓதிய பரகத்தால் அந்நிலையிலும் மறதியுடைய ஆபத்தி லிருந்து பாதுகாப்பாக இருப்பார் என்பது மேற்கூறப்பட்ட சம்பவத்திலிருந்து தெரிய வருகிறது. பொதுவாக காணக் கூடிய விடயம் என்னவென்றால், அதிகமான வயோதிபர்கள் ஒழுக்கமற்ற பேச்சுக்கள் இன்னும் மறதி எனும் நோயில் சிக்கியிருப்பார்கள், ஆனால் சில பாக்கியசாலிகள் வயோதி பத்தை அடைந்த பின்னரும் அவர்களின் மேன்மையான அறிவும், பலமான நினைவாற்றலும் அதை பார்ப்பவர்களை

வியப்பிலாழ்த்தி விடுகிறது. இந்த அனைத்து உயர்வுக்கும் ஒரு காரணம் வாலிபத்தின் இபாதத் மற்றும் குர்ஆனை ஓதுதலுமாகும்.

## வயது வந்த ஆண்களுக்கான மத்ரஸதுல் மதீனா

اَلْحَمْدُلِلّٰه عَزَّوَجَلَّ வாலிபர்களுக்கு இபாதத்தின் ஆசை, ஆர்வத்தை அதிகரிக்கவும் மேலும் குர்ஆனுடைய கல்வியை பரப்பவும், அல்குர்ஆனையும் சுன்னத்துக்களையும் போதிக்கின்ற அரசியல் சார்பற்ற உலகளாவிய அமைப்பான தஃவதே இஸ்லாமியின் முயற்சி புகழத்தக்கதாகும். அதில் ஒன்று "வயது வந்த ஆண்களுக்கான மத்ரஸதுல் மதீனா" வுமாகும். உலகம் முழுவதும் பல்வேறு இடங்கள் மற்றும் மஸ்ஜித்களில் பொதுவாக இஷாத் தொழுகைக்குப்பின் ஆயிரக்கணக்கான மத்ரஸதுல் மதீனாக்களின் ஏற்பாடுகள் உள்ளன.

அதில் இஸ்லாமிய சகோதரர்கள் எழுத்துக்களைப்பேணி சரியான உச்சரிப்புடன், குர்ஆனை கற்றுக்கொள்கிறார்கள், துஆக்களை மனனம் செய்கிறார்கள், தொழுகைகளை சீராக்கிக்கொள்கிறார்கள். மேலும் சுன்னத்துக்களையும் இலவசமாக கற்றுக்கொள்கிறார்கள்.

குர்ஆனின் போதனைகள் பரந்து விரிவதே எனதாசை
கொடிகளில் இஸ்லாமிய கொடி உச்சத்தில் பறக்கட்டும்

## வயது வந்த பெண்களுக்கான மத்ரஸதுல் மதீனா

اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ தஃவதே இஸ்லாமியின் மதனி சூழலில் பரிசுத்த குர்ஆனின் கல்வியை (பார்த்து, மனனம்) பரப்புவதற்கு இஸ்லாமிய சகோதரர்களுக்காக வயது வந்த ஆண்களுக்கான மத்ரஸதுல் மதீனா இருப்பதுடன், பெரிய இஸ்லாமிய சகோதரிகளுக்காக வயது வந்த பெண்களுக் கான மத்ரஸதுல் மதீனாவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதில் ஆயிரக்கணக்கான இஸ்லாமிய சகோதரிகள் பரிசுத்த குர்ஆனை இலவசமாக கற்றுக்கொள்கிறார்கள்.

இந்த மத்ரஸாக்களில் இஸ்லாமிய சகோதரிகளே இஸ்லாமிய சகோதரிகளுக்கு கற்றுக்கொடுக்கிறார்கள். இதைத்தவிர உள்நாடு, வெளிநாடுகளில் எண்ணற்ற மத்ரஸாக்கள் "மத்ரஸதுல் மதீனா" எனும் பெயரில் நிருவப்பட்டுள்ளது. பாகிஸ்தானில் (ரஜபுல் முரஜ்ஜப், ஹிஜ்ரி 1435 வரை) கிட்டத்தட்ட 2064 மத்ரஸாக்கள் உள்ளது. அதில் கிட்டத் தட்ட 101410 மதனி சிறுவர்கள் மற்றும் சிறுமிகளுக்கு பார்த்து ஓதவும், மனனம் செய்வதற்குமான இலவச கல்வி வழங்கப்படுகிறது.

மத்ரஸா வருகின்ற பேராசையை வழங்குவாயாக இறைவா
குர்ஆனை கற்க, கற்பிக்க ஆசையை தருவாயாக இறைவா

صَلُّوْا عَلَی الْحَبِیْب     صَلَّی اللّٰهُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

## மதனி சூழல் தாழ்வானவர்களை உயர்த்தியது

தஃவதே இஸ்லாமியின் ஒரு துறையாகிய “வயது வந்தவர்களுக்கான மத்ரஸதுல் மதீனா” ஒரு வாலிபனுக்கு குர்ஆனை கற்க, நற்குணத்தை உருவாக்க, இபாதத்தில் இன்பத்தை ஏற்படுத்த மாறாக இவ்வாறு விளங்கிக்கொள்ளுங்கள், அதாவது மறுமைக்கான தயாரிப்பை இலேசாக்கி விட்டது. எவ்வாறெனில், ஓர் இஸ்லாமிய சகோதரர் கூறுகிறார்,

“என்னுடைய பாவம் மிகவும் அதிகமாக இருந்தது. அதில் مَعَاذَ اللّٰه கேபலைப்போன்று VCR இன் Lead வழங்குதல், இரவில் ஒழுக்கம் கெட்ட வாலிபர்களுடன் சுற்றுதல், தினமும் இரண்டு அல்லது மூன்று படம் பார்த்தல், மேலும் பலவிதமான கெட்ட நிகழ்ச்சிகளில் இரவை கழித்தலும் உள்ளடங்கும். اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ Bபாபுல் மதீனா கராச்சியின் “நயா ஆபாத்” எனும் பகுதியைச் சேர்ந்த ஓர் இஸ்லாமிய சகோதரருடைய தொடரான தனிப்பட்ட முயற்சியின் பரகத்தினால் அப்பகுதியிலுள்ள வயது வந்தவர்களுக்கான மத்ரஸதுல் மதீனாவுக்கு செல்லும் வாய்ப்பு கிடைத்ததோடு நாயகத்தின் ஆஷிகீன்களுடைய தொடர்பும் கிடைத்தது. மேலும் நான் அல்குர்ஆனையும், சுன்னாக்களையும் போதிக்கின்ற அரசியல் சார்பற்ற உலகளாவிய அமைப்பான தஃவதே இஸ்லாமியின் மதனி சூழலுடன் இணைந்து மதனி வேலைகளில் ஈடுபட்டுக்கொண்டிருக்கிறேன்.”

(நீபத் கீ தபாஹ்காரியான், பக்கம் 147)

ஆலிம்கள், பெரியார்களின் ஒழுக்கங்களை
கற்றுத்தரும் எந்நேரமும் மதனி சூழல்

முஸ்லிம்கள் ஒவ்வொருவரும் சகோதரரே
அளவற்ற அன்பை தரும் மதனி சூழல்

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபத்தை பெறுமதியாக கருதிக் கொள்ளுங்கள்

பிரசித்திபெற்ற தாபிஈன்களில் ஒருவரான ஹழ்ரத் ஸய்யிதுனா அம்ர் இப்னு மைமூன் அவ்தீ رَضِیَ اللهُ تَعَالٰی عَنْهُ அவர்களால் அறிவிக்கப்பட்டுள்ளது: மதீனத்துப் பேரரசர், உள்ளத்திற்கு அமைதியூட்டுபவர், நறுமண வியர்வை கொண்டவர்களான நபி பெருமானார் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் ஒரு மனிதருக்கு அறிவுரை வழங்கும்போது கூறினார்கள். ஐந்துக்கு முன் ஐந்து விடயங்களை பெறுமதியாக எடுத்துக்கொள்ளுங்கள், “வயோதிபத்துக்கு முன் வாலிபத்தை, நோய்க்கு முன் சுகத்தை, வறுமைக்கு முன் செல்வத்தை, வேளைக்கு முன் ஓய்வு நேரத்தை, மரணத்திற்கு முன் வாழ்வை.”

(மிஷ்காதுல் மஸாபீஹ், கிதாபுர் ரிகாக், இரண்டாம் பிரிவு, 2/245, ஹதீஸ் 5174)

பிரசித்திபெற்ற ஸூஃபி கவிஞர் ஹழ்ரத் ஸய்யிதுனா ஷெய்க் முஸ்லிஹுத்தீன் ஸஅதி ஷீராZஸி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الهَادِى அவர்கள் கூறுகிறார்கள்:

کُنُوْنَتْ کِه دَسْتَست خارِی بُکُنْ          دِگر کی بَرْآرِی تُوْ دَسْتْ اَزْ کَفَن

(பிவஸ்தானே ஸஃதி, பாபுல் அவ்வல், தர் அத்லோ தத்பீரோ ராயீ, பக்கம் 48)

(அதாவது, அலட்சிய மனிதனே! உனது ஆரோக்கியமும், துணிவுள்ள கையும் இப்போது விசாலமாக உள்ளது. அந்த கைகளால் ஏதாவது செய்துக்கொள். நாளை கஃபனில் இது கட்டப்பட்டால், பின்பு திறப்பது எப்போது நஸீபாகும்!)

صَلُّوْا عَلَى الْحَبِيْب          صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபத்தை மதித்து நடவுங்கள்

வாலிபத்தைப்பற்றி ஹகீமுல் உம்மத் முஃப்தி அஹ்மத் யார்கான் நஈமி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الغَنِي அவர்கள் எழுதிய கவியின் சுருக்கம்: வாலிபத்தை விளையாட்டுக் கூத்துக்களில் கழித்து விட்டு வயோதிபத்தில் உறுப்புக்கள் சோர்வடைந்த பின் அதிகமாக இபாதத் செய்ய ஆசைப்படுவது முட்டாள் தனமாகும். எதை செய்ய வேண்டுமோ அதை வாலிபத்தில் செய்யுங்கள். ஏனெனில் ஸாலிஹான வாலிபனுக்கு மிகப் பெரிய அந்தஸ்து உண்டு. எனவே ஆரோக்கியம், வாலிபம், செல்வம் மேலும் வாழ்க்கையை வீணாக்கி விடாதீர்கள்.

இதில் நல்அமல்களை செய்யுங்கள். ஏனெனில் இந்த பாக்கியங்கள் மீண்டும் மீண்டும் கிடைப்பதில்லை.

சங்கைமிகு முஹம்மத் பஹ்ஷ் رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه அவர்கள் கூறுகிறார்கள்.

سدا نہ حُسْن جَوانی رہندی ، سدا نہ صحبتِ یاراں

سدا نہ بلبل باغاں بولے ، سدا نہ باغ بہاراں

அதாவது, இந்த அழகான வாலிபம் எக்காலமும் பாதுகாப்பாக இருக்காது. மேலும் நண்பர்கள், பிரியமானவர்களின் நட்பும் எக்காலமும் இருக்கப்போவதில்லை. பூங்காவில் தினமும் ஒலி எழுப்பும் இராப்பாடிப் பறவைகளும் மேலும் பூங்காவின் வசந்தங்களும் எக்காலமும் இருப்பதில்லை.

(மிர்ஆதுல் மனாஜீஹ், 7/16 பிதஸர்ருப்)

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## பிரியும்நேரம் ஹழ்ரத் அமீர் முஆவியாவுடைய வார்த்தைகள்

ஹழ்ரத் ஸய்யிதுனா அமீர் முஆவியா رَضِىَ اللهُ تَعَالٰى عَنْهُ அவர்களது மரணவேளை நெருங்கியபோது, அவர்கள் رَضِىَ اللهُ تَعَالٰى عَنْهُ “என்னை உட்கார வையுங்கள்” எனக்கூறினார்கள். உட்கார வைத்தபோது, அவர்கள் رَضِىَ اللهُ تَعَالٰى عَنْهُ அல்லாஹ்வுடைய

திக்ரிலும், தஸ்பீஹிலும் ஈடுபட்டு விட்டார்கள். பின்பு அழுதவாறு தன்னை நோக்கி (தாழ்மைக்காக) “முஆவியாவே (رَضِیَ اللّٰہ تَعَالٰی عَنۡہُ)! வயோதிபம் மற்றும் பலவீனமான நேரத்திலா அல்லாஹ்வுடைய திக்ர் ஞாபகம் வந்தது, வாலிபம் செழிப்பாக இருந்த நேரத்தில் செய்தீரா” எனக்கேட்டார்கள்.

(லுபாபுல் இஹ்யா, அல்பாபுல் அர்பஊன ஃபி திக்ரில் மௌத் வமா பஃதஹூ, பக்கம் 352, முக்தஸரன்)

## பெரியவர்களின் பணிவு எங்களுக்கு வழிகாட்டியாகும்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே!நமது சங்கையான முன்னோர்கள் رَحِمَهُمُ اللّٰهُ السَّلَام எந்தளவு நன்மைகளை மதிப்ப வர்களாகவும், பணிவுடையவர்களாகவும் இருந்தார்கள். இறைவனின் நேசர், நபி பெருமானார் صَلَّى اللّٰه تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்களுடைய மேன்மையான ஸஹாபியாகவும், வாழ் நாள் முழுவதையும் நன்மையில் கழித்தும் கூட அதிகமாக இபாதத் செய்வதற்கு பாக்கியம் கிடைக்க வேண்டுமே என கவலை இருந்தது. அவர்களுடைய رَضِیَ اللّٰہ تَعَالٰی عَنۡہُ இந்தப் பணிவிலே எங்களுக்கு வழிகாட்டி உள்ளது. அதாவது வாலிபர்களே! வாலிபம் மிகப்பெரிய அருட்கொடையாகும். அதை மதித்து நடப்பதோடு, வீணாக கழிக்க வேண்டாம். இல்லையேல் உணர்வு வரும் நேரத்தில் வில்லில் இருந்து அம்பு போயிருக்கும். மேலும் வில்லில் இருந்து சென்ற அம்பு மீண்டும் வருவதில்லை.

غَافِلْ مَنَشِيں نه وَقْت بَـازِی سْـت     وَقْت هُنَرَا سْت وَ كَارْسَازِی سْت

அதாவது வாலிபனே! அலட்சியமாக இருக்காதீர். இது ஓய்வாகவும், அலட்சியமாகவும் இருப்பதற்குரிய நேரமல்ல. மாறாக தொழில் கற்கும், வேலை செய்யும் நேரமாகும்.

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## இபாதத்தின் பரகத்தினால் வயோதிபத்திலும் வாலிபன்

ஹழ்ரத் அல்லாமா இப்னு ரஜப் ஹம்பலி عَلَيْهِ رَحْمَةُ اللّٰهِ الْقَوِی அவர்கள் வாலிபத்தின் இபாதத்தைப் பற்றி கூறுகிறார்கள். “யார் தனக்கு வாலிபமும், வலிமையும் இருந்த நேரத்தில் அல்லாஹ் عَزَّوَجَلَّ வை ஞாபகம் வைத்திருந்தானோ, அல்லாஹ் عَزَّوَجَلَّ அவன் வயோதிபமாகவும், பலவீனமாகவும் இருக்கும் போது ஞாபகம் வைப்பான். மேலும் அவனுக்கு வயோதி பத்திலும் நன்றாக கேட்கும் சக்தியையும், பார்வையையும், ஆற்றலையும் இன்னும் அறிவுக்கூர்மையையும் கொடுப்பான்.

ஹழ்ரத் அபுத்தய்யிப் தபரி رَحْمَةُ اللّٰهِ تَعَالٰى عَلَيْه அவர்கள் நூறு வருடத்தை விட அதிகமாக வாழ்ந்தார்கள். அவர்களது رَحْمَةُ اللّٰهِ تَعَالٰى عَلَيْه அறிவு மற்றும் உடல் நிலை நலமாகவும், வலிமையாகவும் இருந்தது. அவர்களிடம் உடல் நலத்தின் இரகசியத்தை கேட்டபோது கூறினார்கள், நான் வாளிபத்தில்

எனது உடல் வலிமையை பாவங்களிலிருந்து பாதுகாத்து வந்ததால், இன்று நான் வயோதிபமாகியும் அல்லாஹ் عَزَّوَجَلَّ அதை எனக்காக மீதம் வைத்துள்ளான். அதற்கு மாறாக, ஹழ்ரத் ஜுனைத் رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه அவர்கள் ஒரு வயோதிபர், மக்களிடம் யாசகம் கேட்டுக்கொண்டிருப்பதை கண்டு, இந்த மனிதன் வாலிபத்தில் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய கடமைகளை வீணாக்கினான். அதற்கு அல்லாஹ் عَزَّوَجَلَّ வயோதிபத்தில் அவனை (சக்தியை) வீணாக்கி விட்டான். எனக்கூறினார்கள்.”

(மஜ்மூஆ ரஸாஇலிப்னி ரஜப், 3/100 முலக்கஸன்)

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபத்தின் முயற்சி வயோதிபத்தில் வசதி

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! யாருடைய வாலிபம் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய இபாதத்தில் கழிந்ததோ அத்தகைய ஸாலிஹான வாலிபனுக்கு நல்வாழ்த்துக்கள். மேலும் இபாதத் செய்து செய்து வயோதிபத்தை அடைந்து, வயோதிபத்திலும் இபாதத் செய்யும் ஆசை இருந்து ஆரோக்கியம் மற்றும் துணிவு இடமளிக்காவிட்டாலும் اِنْ شَآءَاللّٰه عَزَّوَجَلَّ அவருக்கு அந்த இயலாத நிலைமையிலும் வாலிபத்தில் ஆரோக்கியத்துடன் செய்த இபாதத்களுக்கு எவ்வளவு நன்மை கிடைத்ததோ அந்தளவு நன்மை கிடைத்துக்கொண்டே இருக்கும். ஹழ்ரத் ஸய்யிதுனா

அனஸ் இப்னு மாலிக் رَضِیَ اللّٰہُ تَعَالٰی عَنْہُ அவர்கள் கூறுகிறார்கள். "மனிதன் (இஸ்லாத்தில் இருந்துக்கொண்டு நன்மைகளை செய்தவாறு) வாழ்நாளின் இறுதிப்பகுதியை அடைந்ததும் அல்லாஹுதஆலா அவனுடைய அமல்களின் பட்டோலையில் அவன் தனது ஆரோக்கியமான காலத்தில் செய்த நன்மைகளைப்போன்றே எழுதுகிறான்." (முஸ்னத் அபீயஃலா, முஸ்னத் அனஸ் பின் மாலிக், 3/293, ஹதீஸ் 3666, முல்தகதன்)

## ஸாலிஹான வாலிபனுக்கு வயோதிபத்தில் பரிசு

ஹகீமுல் உம்மத் முஃப்தி அஹ்மத் யார்கான் நஈமி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الغني அவர்கள் கூறுகிறார்கள். "எந்த வயோதிபர் தனது வயோதிபத்தின் காரணத்தினால் அதிகமாக இபாதத் செய்ய முடியாமல் இருப்பதோடு, அவர் வாலிபத்தில் அதிகமான இபாதத்துக்கள் செய்திருந்தால், அல்லாஹு தஆலா அவரை இயலாதவர் என உறுதிப்படுத்தி, அவரது பட்டோலையில் அவர் வாலிபத்தில் செய்த நல்அமல்களை எழுதுகிறான்." (ஆரிஃப் பில்லாஹ் ஹழ்ரத் செய்க் ஸஅதி ஷீராZஸி عَلَيْهِ رَحْمَةُ اللهِ القَوِى அவர்கள் கூறுகிறார்கள்)

رَسْمَ اسْتْ کِه مَالِکَانِ تَحْرِیْر     آزَاد کُنَنْــدْ بَنْــدَهٔ پِــیر
اَے بَارِ خُدَا، اَے عَالَمِ آرَا     بَرْ سَعْدِی پِیرِ خُوْد بَهْ بَخْشَا

(அதாவது, வயோதிப அடிமைகளை விடுதலை செய்வது, அடிமைகளுடைய எஜமான்களின் வழிமுறையாகும்.

என்னுடைய இரட்சகனே عَزَّوَجَلَّ! உலகத்தை ஒழுங்குபடுத்தக்கூடியவனே! வயோதிபத்திலிருக்கும் ஸஅதிக்கும் மன்னிப்பை வழங்குவாயாக. (மிர்ஆதுல் மனாஜீஹ், 7/89)

ஆகவே வாலிபத்தை மதித்து அதிகதிகமாக இபாதத் செய்யுங்கள். ஏனெனில் நாளை வயோதிபமானது அதிகம் இபாதத் செய்வதிலிருந்து இயலாமல் ஆக்கிவிட்டால், உடலாரோக்கியத்துடன் வாலிபத்தில் செய்த இபாதத்தை போல் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய சன்னிதானத்திலிருந்து நன்மைகள் கிடைக்கும்.

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## அல்லாஹ்வின் அன்புக்குரிய அடியான்

ஹதீஸுல் குத்ஸியில் வந்துள்ளது. ஹழ்ரத் ஸய்யிதுனா அப்துல்லாஹ் இப்னு உமர் رَضِيَ اللّٰهُ تَعَالٰى عَنْهُمَا அவர்கள் அறிவிக்கிறார்கள். நபி பெருமானார் صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் கூறியதாக, அதாவது அல்லாஹ் عَزَّوَجَلَّ கூறுகிறான்: “எனது கழாவின் (விதியின்) மீது விசுவாசம் கொண்டவன், நான் எழுதியதை பொருந்திக்கொண்டவன், என்னால் வழங்கப்பட்ட ரிஸ்கைக்கொண்டு போதுமாக்கிக் கொண்டவன் மேலும் எனது திருப்பொருத்தத்திற்காக தனது மனோ இச்சையை விட்டு விடக்கூடிய வாலிபன், என்னுடைய சன்னிதானத்தில் எனது சில வானவர்களை

போன்றாவார்.” (ஜம்உல் ஜவாமிஃ, 9/276, ஹதீஸ் 28714) உண்மையிலே மனிதன் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுக்கு முழுமையாக வழிப்பட்டு, அவனுடைய நேசர், அகிலத்தின் அருட்கொடை கண்மணி நாயகம் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்களுடைய உண்மையான அடிமையாகி விட்டால், அவர் வானவர்களை போலாவார். மாறாக, சிலர் வானவர்களை விடவும் சிறந்த வர்களாகி விடுவார்கள்.

வானவர்களை விட சிறந்தவராகலாம் மனிதன்
ஆனால் தேவையதில் முயற்சி அதிகம்

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வானவர்களை விட சிறந்தவர் யார்?

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். “எங்களின் ரஸூல் வானவர்களின் ரஸூலை விட சிறந்தவர்களாகும். மேலும் வானவர்களின் ரஸூல் எங்களின் அவ்லியாக்களை விட சிறந்தவர்களாகும். மேலும் எங்களின் அவ்லியாக்கள் சாதாரண வானவர்களை விட அதாவது ரஸூல் அல்லாதவர்களை விட சிறந்தவர்களாகும். அநியாயக்காரன் மற்றும் ஒழுக்க மற்றவன் வானவர்களை விட ஒருபோதும் சிறந்தவராக முடியாது.” (ஃபதாவா ரZஸவிய்யா, 29/391, அன்நிBப்ராஸ், 595)

அருட்கொடையின் பேரொளி, உம்மத்தினருக்கு பரிந்துரை செய்யும் மாநபி صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் நவின்றுள்ளதாக, ஹழ்ரத் ஸய்யிதுனா அப்துல்லாஹ் இப்னு உமர் رَضِىَ اللهُ تَعَالٰى عَنْهُمَا அவர்கள் அறிவிக்கிறார்கள். “யார் இறைவனை வழிப்பட்டு நடப்பதற்காக தனது வாலிபத்தை அர்ப்பணம் செய்தாரோ அப்படிப்பட்ட மனிதனுடன் அல்லாஹ் عَزَّوَجَلَّ நேசம் கொள்கிறான்.”

(ஹில்யதுல் அவ்லியா, 5/394, ஹதீஸ் 7496)

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! மேற்கூறப்பட்ட அறிவிப்புகள் வழிபாட்டை வழக்கமாக்கிக் கொள்பவர்களின் அதிகமான பரகத்துக்கள் மற்றும் ஆதரவை உள்ளடக்கியுள்ளது. அதாவது எந்த பாக்கியசாலி தனது வாலிப பராயத்தை இறைவனின் பொருத்தத்திற்குரிய வேலைகள் மற்றும் அவனுக்கு அடிபணிவதில் கழிப்பதோடு, ஆகாத விடயங்கள் மற்றும் கெட்ட ஆசைகளிலிருந்து தன்னை பாதுகாத்துக் கொள்கிறாரோ, அவருக்காக அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய சன்னிதானத்தில் கண்ணியமும், உயர்வும் மேலும் அவனது நேசராகும் நம்பிக்கையும் உள்ளது. ஏனெனில் வாலிபத்தில் நஃப்ஸ் எனும் அடங்காத குதிரைக்கு கடிவாளம் போடுவது கஷ்டமான விடயமாகும். அதனால்தான் வாலிபத்தில் செய்யும் இபாதத்துக்கு அதிக சிறப்புள்ளது. எவ்வாறெனில், ஹகீமுல் உம்மத் ஹழ்ரத்

முஃப்தி அஹ்மத் யார்கான் நூமி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الغني அவர்கள் எழுதுகிறார்கள். "வாலிபத்தில் பாவங்களிலிருந்து தவிர்ந்து இறைவனை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். ஏனெனில் வாலிபத்தில் உறுப்புக்கள் பலமாகவும் மேலும் நஃப்ஸ் பாவங்களின் பக்கம் (அதிகம்) திரும்புவதாகவும் உள்ளது. அதனால்தான் வயோதிபத்தின் இபாதத்தை விட இக்காலத்தின் இபாதத் மிகச்சிறந்ததாகும்."

(மிர்ஆதுல் மனாஜீஹ், 1/435)

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! பிரச்சினைகள் நிறைந்த இக்காலத்தில் துரதிர்ஷ்டவசமாக அதிகமான வாலிபர்கள் குர்ஆன் மற்றும் சுன்னாவை விட்டும் தூரமாகி, வாலிபத்தின் மயக்கத்தில் மதி மயங்கி, உலகத்தின் பேராசையில் மூழ்கி, நஃப்ஸ் மற்றும் ஷைத்தானின் கையில் அகப்பட்டு பாவங்கள் இன்னும் வெட்கமற்ற விடயங்களின் வெள்ளத்தில் மூழ்கிக்கொண்டிருக்கும்போது, அல்குர்ஆனை யும் சுன்னத்துக்களையும் போதிக்கின்ற அரசியல் சார்பற்ற உலகளாவிய அமைப்பான **தஃவதே இஸ்லாமி** உம்மத்தை சீர்த்திருத்தும் முயற்சியின் கொடியை உயர்த்தி, இந்த வழி தவறிய, வெட்கமற்ற விடயங்களின் வெள்ளத்தை நிறுத்த வெற்றிகரமான முயற்சியின் பயணத்தை ஆரம்பித்து விட்டது. தஃவதே இஸ்லாமியின் வெற்றி இன்று அனைவ ருக்கும் முன்னால் திறக்கப்பட்ட புத்தகத்தைப்போல்

தெளிவாக உள்ளது. அதாவது ஷைத்தானுக்கும் கடிவாளம் இல்லாத நஃப்ஸுக்கும் அடிமையாக இருந்த வாலிபர்கள், அதிர்ஷ்டவசமாக தஃவதே இஸ்லாமியின் மதனி சூழலுடன் இணைந்து கொண்டதும், அவர்களுடைய செலிப்பில்லாத வாழ்க்கையில் மதனி மாற்றத்தின் வசந்தம் வந்து விட்டது. மேலும் அவர்கள் தனது வாளிபத்தின் வசந்தமான நாட்களை அல்லாஹ் عَزَّوَجَلَّ இன்னும் அவனுடைய அன்பு நேசர் நபிபெருமானார் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்களின் பெயரில் அர்ப்பணம் செய்து இந்த மதனி நோக்கத்தை பரப்புபவர்களாக ஆகிவிட்டனர். அதாவது “**நான் என்னையும் உலக மக்கள் அனைவரையும் சீர்திருத்துவதற்காக முயற்சி செய்வேன்.**”

## சமுதாயத்தின் வாளிபர்களும் த:வதே இஸ்லாமியும்

اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ தஃவதே இஸ்லாமியின் மதனி சூழலில் அதிகளவு மாற்றங்களை ஏற்படுத்திய செயற்பாடுகளில் ஒரு முக்கிய செயற்பாடு இதுவாகும். அதாவது இந்த மதனி சூழல் பாவங்களில் மூழ்கி, எந்நேரமும் உலக எதிர்காலத்தின் நலனை சிந்தித்துக் கொண்டிருக்கும் வாலிபர்களை தக்வாவுடைய பாதையில் நடக்கச்செய்வதோடு மறுமையின் சிந்தனைக்காக ஈடுபட வைத்துள்ளது. இந்த மதனி சூழலின் பரகத்தால் அதிகமான இஸ்லாமிய வாளிபர்கள் உலக ஆசைகள் இன்னும் வாளிபத்தின் பராமுக பழக்கத்திலிருந்து முற்றிலும் நீங்கி இறைவனின்

பாதையில் தன்னை அர்ப்பணம் செய்து விட்டார்கள். இதற்கு தஃவதே இஸ்லாமியின் புழக்கப்பாசையில் "வக்ஃபே மதீனா" என்று சொல்லப்படும்.

உலகளவில் கபூலாக தஃவதே இஸ்லாமி
பிழைபொறுப்பவனே! பொருட்டால் மதீனாவின்

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## சிறந்த வாழ்வுக்கான இரகசியம்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! உங்களிடம் மதனி வேண்டுகோள் என்னவென்றால், தனது இம்மை, மறுமையை சீராக்கவும் மேலும் வாழ்க்கையின் ஒவ்வொரு வினாடியையும் பெறுமதியுள்ளதாக ஆக்கிக்கொள்ளவும் **தஃவதே இஸ்லாமி**யின் மதனி சூழலுடன் இணைந்து, அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய இபாதத்துக்காக தயாராகுங்கள். ஏனெனில் சிறந்த வாழ்வுக்கான இரகசியம் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய இபாதத்திலும், வழிப்படுவதிலும் மறைந்துள்ளது. எவ்வாறெனில், பிரசித்தி பெற்ற விரிவுரையாளர், ஹகீமுல் உம்மத் முஃப்தி அஹ்மத் யார் கான் عَلَيْهِ رَحْمَةُ الْحَنَّان அவர்கள் கூறுகிறார்கள். "எல்லோருடைய வாழ்நாளும் கழிகிறது, யார் இறைவனுக்காக அர்ப்பணம் செய்கின்றார்களோ அதுவே சிறந்த வாழ்நாளாகும். யார் தனது வாழ்நாளை அல்லாஹ் عَزَّوَجَلَّ வுக்காக அர்ப்பணம் செய்துள்ளார்களோ,

அப்படிப்பட்ட மனிதர்களுக்கு அல்லாஹ் (عَزَّوَجَلَّ) ஸதகாக்கள் கொடுக்கும்படி விஷேசமான கட்டளையிட்டுள்ளான்.”

(துப்ஸீர் நஃமி, 3/134 முல்தகதன்)

**அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் பேரருள் அவர்கள் மீது பொழியட்டும், அவர்களின் பொருட்டால் நமது பாவங்கள் கணக்கின்றி மன்னிக்கப்படட்டும்.**

آمِیْن بِجَاہِ النَّبِیِّ الْاَمِیْن صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلَیْہِ وَاٰلِہٖ وَسَلَّم

## எழுபது ஸித்தீக்கீன்களுடைய நன்மையை பெறுபவர்

ஹழ்ரத் ஸய்யிதுனா அனஸ் இப்னு மாலிக் رَضِیَ اللّٰہُ تَعَالٰی عَنْہُ அவர்கள் அறிவிக்கிறார்கள். ரஸூலுல்லாஹ் صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلَیْہِ وَاٰلِہٖ وَسَلَّم அன்னவர்கள் கூறினார்கள். அல்லாஹ் عَزَّوَجَلَّ ஹராமாக்கிய விடயங்களிலிருந்து தவிர்ந்து நடப்பதோடு, அவனுடைய கட்டளையின்படி அமல் செய்யும் வாலிபனுக்கு அல்லாஹ் عَزَّوَجَلَّ கூறுகிறான், உனக்காக எழுபது ஸித்தீக்கீன்களுடைய நன்மையுண்டு. (அத்தர்ஙீப் ஃபீ பலாஇலில் அஃமால், Bபாபு ஃபழ்லி இபாததிஷ் ஷாப் இலா ஆகிரிஹி., பக்கம் 78, முக்தஸரன்)

صَلُّوْا عَلَی الْحَبِیْب صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

## அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய உண்மையா அடியான்

ரஸூலுல்லாஹி صَلَّى اللهُ تَعَالٰی عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் கூறியதாக, ஹழ்ரத் ஸய்யிதுனா அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் رَضِیَ اللهُ تَعَالٰی عَنْهُ அவர்கள் அறிவிக்கிறார்கள். அல்லாஹ் عَزَّوَجَلَّ தனது படைப்பினங்களில், யார் தனது வாலிபத்தையும், அழகையும் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய இபாதத்தில் செலவு செய்கிறாரோ, அத்தகைய அழகுமிக்க வாலிபனை அதிகம் விரும்புகிறான். அல்லாஹ் عَزَّوَجَلَّ அப்படியான அடியானைப் பற்றி வானவர்களுக்கு முன்னால் பெறுமைப்படுவதோடு "இது எனது உண்மையான அடியானாகும்." என்று கூறுகிறான், (அத்தர்ஙீப் ஃபீ பலாஇலில் அஃமால், Bபாபு ஃபழ்லி இபாததிஷ் ஷாப் இலா ஆகிரிஹி., பக்கம் 78)

صَلُّوْا عَلَى الْحَبِيْب    صَلَّى اللهُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய சன்னிதானத்தில் நேசத்தின் உயர்வைப் பெற்றுக் கொண்ட அந்த வாலிபர்கள் எந்தளவு பாக்கியசாலிகள்! யாருடைய வாலிபம் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுக்கு வழிப்படுவதில் கழிவதோடு, நப்ஸுக்கு வழிப்பட சக்தியிருந்தும் ஷைத்தானுடைய வளையில் சிக்காமல் இருந்தார்களோ மேலும் எவர்மீது இறையச்சம் மேலோங்கி இருந்ததோ, அத்தகைய பாக்கியசாலிகளுக்கு மேற்கூறப்பட்ட அறிவிப்பு நற்செய்தி யாகும். மேலும் அப்படியான வாலிபர்கள் சமுதாயத்திலும் உயர்ந்த அந்தஸ்தையும், சிறப்பையும் இன்னும் கண்ணியத்தையும் பெறுவார்கள்.

## வெட்கமுள்ள வாலிபன்

வாலிபத்தின் வசந்தத்தை மதீனாவின் நறுமணங்களால் சுகந்தமாக்கிக் கொள்ளவும், வாலிப பருவத்தை பாவக் கறையிலிருந்து பாதுகாத்துக் கொள்ளவும் மேலும் நாணம், வெட்கமுள்ளவர்களாக ஆகுவதற்காகவும் **தஃவதே இஸ்லாமி**யின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனாவிலிருந்து “**Bபாஹயா நோஜவான்**” எனும் சுன்னத்துக்கள் நிறைந்த பயான் கெஸட்டை வாங்கிக்கொள்ளுங்கள். اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ இந்த பயானின் 64 பக்கங்களைக்கொண்ட சிறுநூலையும் மக்தBபதுல் மதீனாவிலிருந்து வாங்க முடியும். நீங்களும் படிப்பதோடு மற்றவர்களுக்கும் அன்பளிப்புச் செய்யுங்கள். اِنْ شَآءَاللّٰه عَزَّوَجَلَّ அதிகமான பரகத்துக்களின் பொக்கிஷத்தைப் பெற்றுக்கொள்வீர்கள்.

صَلُّوْا عَلَى الْحَبِيْب　　صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபம் இறைவனின் அருட்கொடை

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! வாலிபம் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய மிகப்பெரிய அருட்கொடையாகும். யாருக்கு இந்த நிஃமத் கிடைக்கிறதோ அவர் அதை மதித்து அதிகமான நேரத்தை இபாதத்திலும், வழிப்படுவதிலும் கழிக்க வேண்டும். நேரத்தின் விலை மதிப்பில்லா வைரங்களை பிரயோஜனம் தரக்கூடியதாக ஆக்கிக் கொள்ள வேண்டும். ஹகீமுல் உம்மத் ஹழ்ரத் முஃப்தி

அஹ்மத் யார் கான் عَلَيۡهِ رَحۡمَةُ الۡحَنَّان அவர்கள் எழுதுகிறார்கள். “வாலிபத்தின் இபாதத் வயோதிபத்தின் இபாதத்தை விட சிறந்ததாகும். ஏனெனில் இபாதத்தின் அடிப்படை நேரம் வாலிபமாகும். நேரத்தை மதித்து நடப்பதோடு, அதை பெறுமதியாக நினையுங்கள். சென்ற நேரம் மீண்டும் திரும்பி வரப்போவதில்லை.”

(மிர்ஆதுல் மனாஜீஹ், 3/167)

மேலும் குறிப்பாக வாலிப காலத்தின் நேரங்களை மதித்து நடப்பது மிக முக்கியமாகும். ஏனெனில் வாலிபத்தில் மனிதனுடைய உறுப்புக்கள் பலமாகவும் சக்தியுடையதாகவும் இருக்கும். அதன் காரணத்தினால் இபாதத் மற்றும் மார்க்க சட்டங்களை முயற்சியுடனும், அதிக சந்தோஷத்துடனும் நிறைவேற்ற முடியும். வயோதிபத்தில் இந்த வசந்தங்களின் பாக்கியம் மீண்டும் எங்கே கிடைக்கும்! அந்த நேரத்தில் மஸ்ஜிதுக்கு போவதும் மிகக்கடினமாகி விடுவதோடு, பசி, தாகத்தை தாங்கக்கூடிய தைரியமும் இருக்காது. நஃப்ல் ஒரு பக்கம் இருக்க பர்ளான நோன்பை நிறைவேற்றுவதும் கூட மிகக்கடினமாக இருக்கும். எனவே வாலிபத்தின் இபாதத் எப்படியும் உயர் அந்தஸ்துக்குரியதாகும்.

## இபாதத்தில் ஈடுபடும் வாலிபனின் சிறப்பு

மக்கத்து மாமன்னர், மதீனத்து மாவேந்தர், கண்மணி நாயகம் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيۡهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் கூறியதாக, ஹழ்ரத் ஸய்யிதுனா அனஸ் இப்னு மாலிக் رَضِىَ اللهُ تَعَالٰى عَنۡهُ அவர்கள்

அறிவிக்கிறார்கள். வயோதிபத்தில் இபாதத் செய்யும் வயோதிபரை விட சுபஹ் நேரத்தில் இபாதத் செய்யும் வாலிபனின் சிறப்பு எவ்வாறென்றால், அனைத்து மனிதர்கள் மீதும் ரஸூல்மார்களின் (عَلَيۡهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام) சிறப்பை போன்றாகும். (ஜம்உல் ஜவாமிஃ, 5/235, ஹதீஸ் 14769)

صَلُّوۡا عَلَى الۡحَبِیۡب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! இபாதத்தில் ஈடுபடுகின்ற வாலிபர்கள் உண்மையில் பாக்கியசாலிகள் என்பது இந்த அறிவிப்பிலிருந்து தெரிய வருகிறது. அவர்களுக்கு அதிகமான சிறப்புக்கள் மற்றும் பாக்கியங்க ளின் நற்செய்திகள் உள்ளன. ஆனால் இவ்வாறான அறிவிப்பைக்கொண்டு வயோதிபர்கள் எதற்கும் தகுதியற்ற வர்கள் என எண்ணி விடாதீர்கள். என் இனிய இஸ்லாமிய சகோதரர்களே! அவ்வாறில்லை, ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள்! வயோதிபர்களையும், பலவீனர்களையும் உயர்ந்த அந்தஸ்தில் வைப்பது இஸ்லாமிய சமூகத்தின் தனிப்பட்ட விஷேசமாகும். வயோதிபர்களை பாரமாக நினைத்து வீட்டை விட்டு வெளியாக்குவதும், அவர்களை ஏதாவதொரு அமைப்பில் சேர்ப்பதும் இஸ்லாத்தில் நினைத்துப் பார்க்க முடியாத விடயமாகும். இஸ்லாத்தின் மேலான மேன்பாடு என்னவென்றால், இந்த தெளிவான மார்க்கத்தில் நிறம், குலம், வயது இன்னும் உயரளவு வேறுபாடின்றி ஒவ்வொரு முஸ்லிமும் தனக்கென விஷேச

மான இடத்தை வைத்துள்ளார்கள். அதைப்பேணுவது மற்ற முஸ்லிம்கள் மீது கட்டாயமாகும். அதைப்பற்றிய சுருக்கமான விபரம் தஃவதே இஸ்லாமியின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனாவினால் அச்சிடப்பட்ட 32 பக்கங்கள் அடங்கிய “இஹ்திராமெ முஸ்லிம்” எனும் சிறுநூலிலும் கூறப்பட்டுள் ளது. ஆகவே! ஒவ்வொரு முஸ்லிம்களும், வயோதிபராக இருந்தாலும், வாளிபராக இருந்தாலும் இஸ்லாத்தின் பார்வையில் அவர்களுக்கு விஷேசமான முக்கியத்துவம் உள்ளது.

## வயோதிபத்தின் சிறப்பு

அகிலத்தின் அதிபதி, அண்ணல் நபி صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் நவின்றுள்ளார்கள். “வெள்ளை முடியை பிடுங்க வேண்டாம், ஏனெனில் அது முஸ்லிமின் ஒளியா கும். எந்த மனிதர் இஸ்லாத்தில் வயோதிபத்தை அடைந் தாரோ, அல்லாஹ் عَزَّوَجَلَّ அதன் காரணத்தினால் அவருக்கு நன்மைகளை எழுதுவான், தவறுகளை அழித்து மேலும் தரஜாவை உயர்த்துவான்.” (அபூதாவூத், கிதாபுல் தரஜ்ஜுல், Bபாபு ஃபீ நத்ஃபிஷ் ஷைBப், 4/115, ஹதீஸ் 4202)

ஈருலக அருளாளர், மனித குலத்தின் மாமன்னர், பாவிகளுக்கு பரிந்துரை செய்பவர், கண்மணி நாயகம் صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் கூறியதாக, ஹழ்ரத் ஸய்யிதுனா கஅப் இப்னு முர்ரா رَضِیَ اللهُ تَعَالٰى عَنْهُ அவர்கள் அறிவிக்கிறார்கள். “யார் இஸ்லாத்தில் வயோதிபத்தை

அடைகிறாரோ, அந்த வயோதிபம் கியாம நாளன்று அவருக்கு ஒளியாகும்.” (திர்மிதி, கிதாப் ஃபலாஇலுல் ஜிஹாத், Bபாபு மாஜாஅ ஃபீ பழ்லி மின் ஷாBபி ஷைபதி ஃபீ ஸBபீலில்லாஹ், 3/237, ஹதீஸ் 1641)

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

ஆகவே வயோதிப இஸ்லாமிய சகோதரர்கள் தனது மனதை கவலையில் ஆழ்த்தி, நம்பிக்கை இழந்து விடவேண்டாம்.

ஒருவர் எவ்வளவு அழகாக கூறினார்:

வயோதிபமும் பெறுமதி வாய்ந்ததே வாலிபத்தின் பின்
இவ்வயோதிபமும் கிடைக்காது மரணம் திடீரென வந்தால்

வாழ்க்கை எனும் பயணத்தின் எந்த சந்தர்ப்பத்திலாவது சோர்வு ஏற்பட்டால் அப்போதும் நம்பிக்கை இழந்து விட வேண்டாம். மாறாக அதை பெறுமதியாக எடுத்துக்கொள்ளுகள். காலை வாழ்க்கை மாலையாக முன் அழுதழுது தக்வா மற்றும் பயபக்தியின் மூலம் அல்லாஹ் عَزَّوَجَلَّ வை திருப்திப்படுத்தும் முயற்சியில் ஈடுபடுங்கள். மேலும் நம்பிக்கையும், பயமும் சேர்ந்த ஆர்வத்துடன் கைகளை விரித்து, அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய சன்னிதானத்தின் பக்கம் திரும்புங்கள். நம்பிக்கையை உறுதிப்படுத்தும் இந்த ஆயத்தை لَا تَقْنَطُوْا مِنْ رَّحْمَةِ اللّٰهِ (குர்ஜுமா கன்Zஸுல் ஈமான்: அல்லாஹ்வுடைய

ரஹ்மத்தை விட்டும் நம்பிக்கை இழக்க வேண்டாம். (ஜுமஸ்உ 24, அஸ்ஸுமர் 53) கவனத்தில் கொள்ளுங்கள். اِنْ شَآءَاللّٰه عَزَّوَجَلَّ நம்பிக்கை இல்லாமலும், வெறும் கையோடும் அல்ல மாறாக பிழைபொறுப்பு, பாவமன்னிப்பு எனும் அழியாச்செல்வத் துடன் திரும்புவீர்கள்.

மேலும் இதையும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்! அதாவது வாழ்க்கையின் ஏதாவதொரு சந்தர்ப்பத்தில் அது வயோதிபமாக இருந்தாலும் சரி, அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய சன்னிதானத்தில் தௌபா செய்வது பாக்கியசாலிகளின் பகுதியாகும். இல்லையேல், இக்காலத்தில் பல மனிதர்கள் வயோதிபத்தின் நுழைவாயிலில் கால்வைத்தும் கூட பலவிதமான விளையாட்டுக்கள் இன்னும் ஏனைய ஹராமான வேலைகளில் இன்பத்தின் பொருட்களை தேடும் முயற்சியில் ஈடுபட்டுக் கொண்டிருக்கின்றனர். வாலிபத்தை ஆரம்பத்திலேயே அலட்சியத்தால் வீணாக்கி விட்டு, வயோதிபத்திலும் நன்மை செய்யும் பாக்கியம் இல்லை. அப்படியானால் மறுமைக்காக ஆயத்தம் செய்ய சாத்தியமான நேரம் வாழ்நாளில் எப்போதுதான் ஏற்படும்?

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

تُوْبُوْا اِلَى الله اَسْتَغْفِرُالله

صَلُّوْا عَلَى الْحَبِيْب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! நமது வாலிபத்தை நாம் மதிக்க வேண்டும். இல்லையெனில் வயோதிபத்தில் கவலையின் நிழல் சிலவேளை கஷ்டத்தை ஏற்படுத்தும். மேலும் அந்நேரத்தில் எதுவும் செய்ய முடியாது. அடியான் ஏதாவது செய்ய முயற்சி செய்தாலும் துணிச்சல் கைக் கூடாது. வாலிபத்தை ஞாபகப்படுத்தினாலும் வாலிபம் திரும்புவதில்லை, வயோதிபத்திலிருந்து வெறுப்படைந்தாலும் அதுவும் திரும்பி போவதில்லை. மேலும் அந்நேரத்தில் கவலைப்படுவதால் எந்தவொரு பிரயோஜனும் கிடையாது.

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! நிச்சயமாக வாலிபத்தில் செய்யும் இபாதத்துக்கு மிக அதிகமான சிறப்புக்கள் உள்ளன. வாலிபத்தில் இபாதத் செய்பவர்கள் மேலும் தன்னைத்தானே பாவங்களிலிருந்து தவிர்ந்து கொள்பவர்களுக்கும் அல்லாஹ் عَزَّوَجَلَّ எந்தளவு கிருபை செய்கிறான். அதாவது,

## ஸாலிஹான வாலிபனுக்கு கிடைக்கும் நன்கொடை

தஃவதே இஸ்லாமியின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனாவினால் அச்சிடப்பட்ட 56 பக்கங்கள் அடங்கிய “கராமாதே பாரூகெ அஃலம்” எனும் சிறுநூலின் 24ஆம் பக்கத்தில் உள்ளது. அமீருல் முஃமினீன் ஹழ்ரத் ஸய்யிதுனா உமர் பாரூகெ அஃலம் رَضِیَ اللهُ تَعَالٰی عَنْهُ அவர்கள் ஒரு தடவை

ஸாலிஹான ஒரு வாலிபனின் கப்ருக்கு சென்று கூறினார் கள், மனிதனே! அல்லாஹ் عَزَّوَجَلَّ வாக்களித்துள்ளான்.

وَ لِمَنْ خَافَ مَقَامَ رَبِّهٖ جَنَّتٰنِ ﴿۳۶﴾

தர்ஜுமா கன்Zஸுல் ஈமான்: யார் தனது இறைவனுடைய சன்னிதானத்துக்கு முன் நிற்கப்பயப்படுகிறாரோ அவருக்கு இரண்டு சுவர்க்கங்களாகும்.

வாலிபனே! கூறுங்கள்! உம்முடைய கப்ரின் நிலைப்பாடு என்ன? அந்த ஸாலிஹான (அமலுடைய) வாலிபன் கப்ருள்ளே இருந்து அவர்களுடைய رَضِیَ اللہُ تَعَالٰی عَنْهُ பெயரைக் கூறி அழைத்து, இரண்டு முறை சத்தமாக பதிலளித்தார். 'قَدْ اَعْطَانِيْهِمَا رَبِّيْ عَزَّوَجَلَّ فِي الْجَنَّةِ' அதாவது, என்னுடைய இறைவன் عَزَّوَجَلَّ அந்த இரண்டு சுவனங்களையும் எனக்கு வழங்கி விட்டான். (தாரீக் மதீனா திமிஷ்க், 45/450)

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

سُبْحٰنَ اللّٰـه عَزَّوَجَلَّ! இந்த சம்பவத்திலிருந்து விளங்குகிறது, எந்த மனிதர் நன்மைகள் நிறைந்த வாழ்க்கையை வாழ்வதோடு, இறைவனை عَزَّوَجَلَّ பயந்து நடக்கிறாரோ, அவர் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய பூரணமான ரஹ்மத்தைக்கொண்டு இரண்டு சுவனங்களுக்கு தகுதியுடையவராகி விடுகிறார். எனவே

வாளிபத்தை நன்மையிலும், பேணுதலிலும் களிப்பதோடு, உள்ளத்தின் ஆசைகளுக்கு வழிப்படுவதிலிருந்து தவிர்ந்து கொள்ளுங்கள். இப்பொழுதே தயாராகி விடுங்கள்! ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள்! இந்த அழகும், வாலிபமும் அழியக்கூடிய செல்வமாகும். மேலும் இதன்மீது கர்வமும், பெருமையும் கொள்வது அறியாத மடமையாகும்.

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! இப்பொழுது இரண்டு பயபக்தியுடைய வணக்கசாலிகளான வாலிபர்களின் புதுமையான சம்பவத்தை கவனியுங்கள். இறைவன் عَزَّوَجَلَّ உடைய ஞாபகத்தால் உள்ளங்களை நிரப்புபவர்களுக்கு எப்படியான அதிசயங்கள் வழங்கப்படுகின்றன என்பதை பாருங்கள்.

## கராமத்துடைய வாலிபர்

ஹழ்ரத் ஸய்யிதுனா மாலிக் பின் தீனார் عَلَيْهِ رَحْمَةُ اللّٰهِ الغفار அவர்கள் கூறுகிறார்கள். ஒரு பயணத்தின்போது எனக்கு தாகம் ஏற்பட்டது. நான் தண்ணீரைத்தேடி ஒரு பல்லத்தாக்கின் பக்கம் சென்றபோது, திடீரென பயங்கர சத்தமொன்றைக் கேட்டேன். சிலவேளை மிருகம் ஏதாவது என்பக்கம் வருகிறதோ என நினைத்து ஓட ஆரம்பிக்கும் போது, மலைகளிலிருந்து யாரோ என்னை சத்தமாக அழைத்து, “மனிதனே! நீர் நினைப்பதைப்போல் எந்த

விடயமும் கிடையாது. இது அல்லாஹ் عَزَّوَجَلَّ உடைய ஒரு இறைநேசராகும். அதிக துயரத்தினால் அவர்கள் ஒரு பெருமூச்சு விட்டபோது, அதன் சத்தம் கூடிவிட்டது.'' எனக்கூறினார். பின்பு என்னுடைய பாதைக்கு நான் திரும்பியபோது ஒரு வாலிபர் இபாதத்தில் ஈடுபட்டுக் கொண்டிருப்பதைக் கண்டேன். நான் அவருக்கு ஸலாம் சொல்லி தனது தாகத்தைப்பற்றி கூறியபோது அவர் சொன்னார்.

''மாலிகே! (رَحۡمَةُ اللّٰہِ تَعَالٰی عَلَیۡه) இவ்வளவு பெரிய ஆட்சி பீடத்திலே உமக்கு தண்ணீரின் ஒரு துளியாவது கிடைக்க வில்லையா?'' பிறகு அவர் பாறையின் பக்கம் சென்று அதனை காலால் அடித்து விட்டு சொன்னார். ''சிதறிப் போன எழும்புகளுக்கும் உயிர் கொடுக்கும் வல்லமையுள்ள இறைவனின் சக்தியை கொண்டு எங்களுக்கு தண்ணீரை வழங்கி விடுவாயாக.'' திடீரென பாறையிலிருந்து தண்ணீர் அலைபோன்று ஊற்றெடுக்க ஆரம்பித்தது. நான் தேவையான அளவு தண்ணீர் குடித்த பிறகு, எனக்கு பிரயோஜனம் அளிக்கக்கூடிய ஏதாவது நல்லுபதேசம் செய்யுமாறு வேண்டினேன். அப்போது அவர் சொன்னார், ''தனிமையில் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய இபாதத்தில் ஈடுபடுங்கள். அவன் (عَزَّوَجَلَّ) உங்களை காடுகளிலும் தண்ணீரைக் கொண்டு செலிப்பாக்குவான்.'' இவைகளைக் கூறிவிட்டு அவர் தனது பாதையில் சென்று விட்டார்.

(அல்ரௌளுல் ஃபாஇக், பக்கம் 166, பிதஸர்ருப்)

உன் வழிப்பாட்டிலேயே என் வாழ்வு
ஆஹ்! கழியவேண்டுமே சதாவும் இறைவா

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## பயபக்தியுடைய ஸாலிஹான வாலிபன்

ஹழ்ரத் ஸய்யிதுனா துன்னூன் மிஸ்ரி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الْقَوِى அவர்கள் ஒருமுறை ஷாம் நாட்டுக்கு சென்றார்கள். அவர்கள் رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه அழகான, செழிப்பான ஒரு பூங்காவின் பக்கமாக சென்றபோது, ஒரு வாலிபன் ஆப்பிள் மரத்திற்கு கீழே தொழுகையில் ஈடுபட்டுக்கொண்டிருப்பதை கண்டார்கள். அவர்களுக்கு رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه அந்த ஸாலிஹான வாலிபருடன் பேச ஆர்வம் ஏற்பட்டது. அவர் ஸலாம் கொடுத்ததும் அவரது கவனத்தை என்பக்கம் திருப்ப நான் முயற்சித்த போது, பதிலளிப்பதற்கு மாறாக பூமியில் இந்த கவிதையை எழுதினார்,

مُنِعَ اللِّسَانُ مِنَ الْكَلَامِ لِاَنَّهٗ     كَهْفُ الْبَلَاءِ وَ جَالِبُ الْاٰفَاتِ
فَاِذَا نَطَقْتَ فَكُنْ لِّرَبِّكَ ذَاكِرًا     لَا تَنْسَهٗ وَاَحْمِدْهٗ فِى الْحَالَاتِ

அதாவது, நாவை பேச்சிலிருந்து தடுக்கப்பட்டுள்ளது. ஏனெனில் இது (நாவு) விதவிதமான முஸீபத்துக்களின் குகையாகவும் இன்னும் ஆபத்துக்களை கொண்டு வருவ

துமாகும். ஆகவே பேசுவதாக இருந்தால் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய திக்ரை செய்யுங்கள். அவனை ஒருபோதும் மறக்காதீர், மேலும் அவனை எந்நேரமும் புகழுங்கள்.

வாலிபருடைய அந்த எழுத்து அவர்களின் رَحْمَةُ اللهِ تَعَالٰی عَلَيْه ஒளிமயமான உள்ளத்தில் தாக்கத்தை ஏற்படுத்தியதோடு, அவர்களுக்கு அழுகையும் வந்து விட்டது. அதன்பின், அவர்கள் رَحْمَةُ اللهِ تَعَالٰی عَلَيْه அதற்குப் பதிலாக பூமியில் இக்கவிதையை எழுதினார்கள்.

وَمَـا مِـنْ كَاتِــبٍ اِلَّا سَــيَبْلٰى        وَ يُبْقِى الدَّهْرُ مَا كَتَبَتْ يَـدَاهُ

فَلَا تَكْتُبْ بِكَفِّكَ غَيْرَ شَيْءٍ        يَسُرُّكَ فِىْ الْقِيَامَةِ اَنْ تَرَاهُ

எழுதக்கூடிய அனைவரும் ஒரு நாளைக்கு கப்ரை அடைவார்கள். ஆனால் அவர்களுடைய கைகள் எழுதியவை எக்காலமும் மீதமிருக்கும். எனவே கியாம நாளில் எதைப் பார்த்து உங்களுக்கு சந்தோஷம் ஏற்படுமோ அப்படியான விடயத்தை தனது கையால் எழுத வேண்டும்.

ஹழ்ரத் ஸய்யிதுனா துன்னூன் மிஸ்ரி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الْقَوِى அவர்கள் கூறுகிறார்கள். நான் எழுதிய வசனத்தை படித்த அந்த ஸாலிஹான வாலிபன் ஒரு கூக்குரல் விட்டுவிட்டு உயிரை இறைவனிடம் ஒப்படைத்தார். நான் அவருடைய ஜனாஸா காரியங்களை செய்ய நினைத்தேன். ஆனால் மறைவான சப்தம் வந்தது, **துன்னூன்!** அவரை விட்டு விடுங்கள்.

வானவர்கள் உம்முடைய ஜனாஸா காரியங்களை செய்வார்கள் என்று ஈருலக இரட்சகன் عَزَّوَجَلَّ அவருக்கு வாக்களித்துள்ளான். இதைக்கேட்ட அவர்கள் رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه தோட்டத்தின் ஒரு பகுதியில் இபாதத்திலே ஈடுபடலானார்கள். சில ரக்அத்துக்கள் தொழுது விட்டு பார்த்தபோது, அங்கே அந்த வாலிபனின் அடையாளமே இருக்கவில்லை.

(ரௌழுர் ரியாஹீன், பக்கம் 49, பிதஸர்ருப்)

உன் அன்பில் நான் இலயிக்க வேண்டும்
புகட்டு பானத்தை அப்படியான இறைவா!

## அர்ஷின் நிழலைப்பெரும் பாக்கியசாலி

வாலிபத்தில் இபாதத் செய்பவர்களுக்கும், இறையச்சம் உள்ளவர்களுக்கும் வாழ்த்துக்கள். கியாம நாளில் சூரியன் ஒரு மைல் தூரத்தில் நின்று நெருப்பை பொழியும்போது, உயிருக்கு வேதனையளிக்கும் அந்த உஷ்னத்திலிருந்து தப்புவதற்கு அர்ஷின் நிழலைத்தவிர வேறு எந்த வழியும் இருக்காது. அப்போது அல்லாஹ் عَزَّوَجَلَّ இப்படிப்பட்ட நல்ல பாக்கியசாலிகளான வாலிபர்களுக்கு தனது பாதுகாப்பான அர்ஷின் ரஹ்மத்துடைய நிழலை வழங்குவான்.

எவ்வாறெனில், ஹழ்ரத் ஸய்யிதுனா இமாம் அப்துர் ரஹ்மான் ஜலாலுத்தீன் ஸுயூத்தி ஷாஃபிஈ عَلَيْهِ رَحْمَةُ اللهِ الكَافِى அவர்கள் எழுதுகிறார்கள். ஹழ்ரத் ஸய்யிதுனா ஸல்மான்

رَضِىَ اللّٰهُ تَعَالٰى عَنْهُ அவர்கள் ஹழ்ரத் ஸய்யிதுனா அபூதர்தா رَضِىَ اللّٰهُ تَعَالٰى عَنْهُ அவர்களுக்கு கடிதம் எழுதினார்கள். அதாவது, "இந்த குணங்கள் உடைய முஸ்லிம்கள் அர்ஷின் நிழலில் இருப்பார்கள். (அதில் இரண்டு இதுவாகும்)

1. எவருடைய தோழமை, வாலிபம் இன்னும் சக்தி அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய விருப்பம் மற்றும் திருப் பொருத்தத்தின் வேலைகளில் கழிந்ததோ அப்படியான மனிதர்.

2. யார் அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய திக்ரை செய்து, அவனின் பயத்தினால் அவனுடைய கண்களிலிருந்து கண்ணீர் வடிந்ததோ அப்படிப்பட்ட மனிதர்."

(முஸன்னஃப் இப்னி அBபீ ஷைபா, கிதாபுஸ் Zஸுஹ்த், கலாமு ஸல்மான், 8/179, ஹதீஸ் 12, முல்தகதன்)

யா ரப்! உனதச்சத்தால் நான் அதிகம் அழவேண்டும்
நீ தனது முஹப்பத்தில் எனை இலயிக்க வைத்திடு

صَلُّوْا عَلَى الْحَبِيْب  صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

நமது சங்கையான முன்னோர்கள் رَحِمَهُمُ اللّٰهُ تَعَالٰى வாலிபத்தை மிகவும் மதிப்பதுடன், அதை மதிக்குமாறு அறிவுரையும் வழங்குவார்கள்.

## இமாம் கZஸ்ஸாலியுடைய நல்லுபதேசம்

ஹுஜ்ஜதுல் இஸ்லாம் ஹழ்ரத் ஸய்யிதுனா இமாம் அபூ ஹாமித் முஹம்மத் பின் முஹம்மத் கZஸ்ஸாலி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الوالى அவர்கள், வாலிபர்கள் மற்றும் தௌபாவில் தாமதம் செய்பவர்களுக்கு விளங்க வைக்கும்போது கூறுகிறார்கள். “நீ சிந்திப்பதில்லையா? அதாவது நீ எப்போதிலிருந்து உனது உள்ளத்திடம், நாளை அமல் செய்வேன், நாளையி லிருந்து செய்வேன், என வாக்களித்து வருகிறீர். அந்த “நாளை” “இன்றாக” மாறிவிட்டது. உனக்கு தெரியாதா நாளை வந்தது, போய்விட்டது. அது கடந்த நாளாக ஆகிவிட்டது. மாறாக, உண்மையான விடயம் என்ன வென்றால், நீர் “இன்று” அமல் செய்வதிலிருந்து பலவீன மானால் “நாளை” அதிகமாக பலவீனமாவீர்.

(இன்றைய வேலையை நாளைவரை பிற்படுத்துபவர்களும், தௌபா மற்றும் வழிப்படுவதில் தாமதிப்பவர்களும்) அந்த மனிதரை போலவராவார். அதாவது யார் மரத்தைப் பிடுங்குவதிலிருந்து வாலிபத்தில் பலவீனமாக இருந்து, அதை அடுத்த வருடம் வரை தாமதம் செய்கிறாரோ, ஆனால் அவருக்கு தெரியும் இவ்வாறு நேரம் சென்று கொண்டிருக்கும்போது மரமும் அதிக சக்தி பெறுவதோடு, உறுதியாகியும் விடும். மேலும் பிடுங்குபவர் பலவீனமாகிக் கொண்டே போவார். ஆகவே யார் அதை வாலிபத்தில் பிடுங்க வில்லையோ, அவர் வயோதிபத்தில் ஒருபோதும் பிடுங்கவே மாட்டார்.” (இஹ்யாஉல் உலூம், 4/72)

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! இமாம் கZஸ்ஸாலி عَلَيْهِ رَحْمَةُ اللهِ الوالى அவர்களுடைய இந்த முபாரக்கான அறிவிப்பு எந்தளவு சிந்தனையை ஏற்படுத்துகிறது. யார் வாலிபத்தில் மார்க்க சட்டங்கள் மற்றும் அல்லாஹ்வுக்கு வழிப்படுவதிலும் குறைபாடு செய்கிறாரோ, அவர் வயோதிபத்தில் அந்த தவறுகளுக்கு பரிகாரம் செய்வார் என்று எவ்வாறு அவரை நம்பிக்கை வைக்க முடியும். ஏனெனில் அந்நேரத்தில் உடல் மற்றும் உறுப்புக்கள் பலவீனத்திற்கு உள்ளாகியிருக்கும். ஆகையால் வாலிபத்தை பெறுமதியாக நினைத்து, இந்த வயதிலேயே அடக்கமில்லாத நப்ஸுக்கு கடிவாளத்தை போடுவதோடு அவசரமாக தௌபாவும் செய்யுங்கள். மரணத்தின் செய்தி எப்போது வருமென்று தெரியாது. ஏனெனில் மரணம், வாலிபத்தையோ, சிறுபராயத்தையோ பார்ப்பதில்லை.

மரணம் அழகையோ வாலிபத்தையோ
சிறுபராயத்தையோ பார்ப்பதில்லை

ஆம், வயது பதினெட்டு வருடமானாலும்
அல்லது ஆனாலும் ஐம்பத்தைந்தாக

ஆகவே வயதின் எந்த பகுதியாக இருந்தாலும், மரணத்தை நினைத்து தௌபா செய்வதில் அவசரப்படுங்கள். மேலும் வாலிபர்கள் இதன் மீது அதிக கவனம் செலுத்துங்கள். அதாவது, வாலிபத்தின் தௌபா அல்லாஹ் عَزَّوَجَلَّ வுக்கு மிகவும் விருப்பமானதாகும்.

## வாலிபத்தில் தௌபாவின் சிறப்பு

அல்லாஹ்வின் அன்பர், மறைமுக ஞானத்தை அறிந்தவர், குறைகளற்ற தூயவர்களான மாநபி صَلَّى اللهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் நவின்றுள்ளார்கள், اِنَّ اللّٰهَ تَعَالٰى يُحِبُّ الشَّابَّ التَّاِئبَ நிச்சயமாக அல்லாஹுதஆலா தௌபா செய்யக்கூடிய வாலிபனை விரும்புகிறான். (கன்Zஸூல் உம்மால், கிதாபுத் தௌபா, அல் ஃபஸ்லுல் அவ்வல், பாகம்: 3,4/87, ஹதீஸ் 10181)

## வாலிபத்தில் தௌபா செய்பவர்களுடன் விருப்பம் ஏன்?

முபல்லிகே இஸ்லாம் ஹழ்ரத் அல்லாமா செய்க் ஷுஐப் ஹரீஃபீஷ் رَحْمَةُ اللهِ تَعَالٰى عَلَيْه அவர்கள் கூறுகிறார்கள். அல்லாஹ் عَزَّوَجَلَّ தனது அடியானுடன் எப்போது அன்பு வைக்கிறான் என்றால், அவன் வாலிபத்தில் தௌபா செய்பவனாக இருக்க வேண்டும். ஏனெனில் வாலிபம் பச்சை மரக்கிளையை போன்றாகும். அவன் தனது வாலிபம் மற்றும் அனைத்து விதமான இச்சைகள் மேலும் இன்பங் களில் ஆசை ஏற்படும்போதும், அதன் விருப்பம் உண்டாகும் வயதிலும் தௌபா செய்கிறான், மேலும் உலகம் அவன் பக்கம் கவனம் செலுத்தும் அந்நேரத்தில், அல்லாஹ் عَزَّوَجَلَّ வுடைய திருப்பொருத்தத்திற்காக அந்த அனைத்தையும் விட்டுவிட்டால், அவன் அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் விருப்பத்திற்கு தகுதியுடையவனாக ஆகிவிடுகிறான். மேலும் அவனுடைய

ஏற்றுக்கொள்ளப்பட்ட நல்லடியார்களுடன் அவனையும் சேர்த்து கொள்ளப்படுகிறது.

(ஹிகாயதேன் ஓர் நஸீஹதேன், பக்கம் 75)

ஹழ்ரத் ஸய்யிதுனா அனஸ் இப்னு மாலிக் رَضِیَ اللّٰہ تَعَالٰی عَنْہُ அவர்கள் அறிவிக்கிறார்கள். அகிலத்தின் அதிபதி, மனித குலத்தின் மாமன்னர் கண்மணி நாயகம் صَلَّی اللّٰہ تَعَالٰی عَلَیْہِ وَاٰلِہٖ وَسَلَّم அன்னவர்கள் கூறினார்கள், “அல்லாஹ் عَزَّوَجَلَّ வுக்கு தௌபா செய்யும் வாலிபனை விட அதிக விருப்பமுள்ள யாரும் கிடையாது.”

(கன்Zஸுல் உம்மால், கிதாபுல் மவாஇல் இலா ஆகிரிகி, அத்தர்ஙீபுல் அஹாதி, அல்ஜுஸ்உ 15, 8/332, ஹதீஸ் 43101)

صَلُّوْا عَلَی الْحَبِیْب     صَلَّی اللّٰہُ تَعَالٰی عَلٰی مُحَمَّد

## வாலிபத்தில் இஸ்தி:பார் செய்யுங்கள்

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! வாலிபத்தில் இபாதத் மற்றும் தௌபாவின் பக்கம் திரும்பக்கூடிய வாலிபர் எந்தளவு பாக்கியசாலி ஆவார். அதாவது அல்லாஹ் عَزَّوَجَلَّ அவரை தனது இரக்கமுள்ள அடியானாக்கி விடுகிறான். உண்மைதான்

دَر جَوَانِی تَوبَہ کَردَن شَیوَۂ پَیغَمبَرِی
وَقتِ پِیرِی گُرگِ ظَالِم مِی شَوَد پَرھیزگَار

அதாவது வாலிபத்தில் இஸ்திஃபார் செய்வது சங்கையான நபிமார்களின் عَلَيۡهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام சுன்னத்தாகும். இல்லாவிட்டால் அநியாயக்கார ஓநாயும் வயோதிபத்தில் பேணுதலின் ஆடையை போர்த்திக் கொள்கிறது.

صَلُّوۡا عَلَى الۡحَبِيۡب صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## ஒரு சந்தேகமும், அதற்கு நிவாரணமும்

**சந்தேகம்:** மேற்கூறப்பட்ட கவிதையில் தௌபாவும் இஸ்திஃபாரும் நபிமார்களின் عَلَيۡهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام சுன்னத் என்று சொல்லப்பட்டது. ஆனால் தௌபா என்பது பாவத்தின் மீது செய்வதாகும். அப்படியானால் مَعَاذَ اللّٰه عَزَّوَجَلَّ சங்கையான நபிமார்கள் عَلَيۡهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام அவர்களாலும் பாவம் ஏற்பட வாய்ப்புண்டா?

**சந்தேக நிவர்த்தி:** இல்லை, ஒருபோதும் இல்லை. சங்கையான நபிமார்கள் عَلَيۡهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام அனைத்து விதமான தவறுகள் மற்றும் பாவங்களிலிருந்தும் மஅசூமானவர்கள். மஅசூம் என்பதன் பொருள், அவர்களுக்கு இறைவனுடைய பாதுகாப்பின் வாக்குறுதி அளிக்கப்பட்டுள்ளது. அதன் காரணத்தால் அவர்கள் மூலம் பாவம் இடம்பெறுவது மார்க்க ரீதியாக சாத்தியமற்ற விடயமாகும். அதேபோல், கண்ணியம் மற்றும் நன்னடத்தைக்கு மாற்றமான செயல்களிலிருந்தும் நுபுவ்வத்துக்கு முன்னும், பின்னும்

மஅஸூமானவர்கள் என்பது அனைவரது ஏகோபித்த கருத்தாகும். இன்னும் பெரும் பாவங்களில் இருந்து பொதுவாக மஅஸூமானவர்கள். மேலும் வேண்டுமென்று செய்த சிறுதவறுகளில் இருந்து நுபுவ்வத்துக்கு முன்னும், பின்னும் மஅஸூமானவர்கள் என்பதே உண்மையாகும்.

(முலக்கஸ், அZஸ் பஹாரெ ஷரீஅத், பாகம் 1, பக்கம் 38–39)

சங்கையான நபிமார்கள், ரஸூல்மார்களின் عَلَيْهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام தௌபா மற்றும் இஸ்திஃபாரின் வழமைகள் அறிவிக்கப் பட்டுள்ளதே, அவை பணிவுக்காகவும், உம்மத்தின் படிப்பினைக்காகவும் ஆகும். அதனால்தான் மேலே கூறிய கவிதையில் தௌபா மற்றும் இஸ்திஃபாரை சங்கையான நபிமார்களின் عَلَيْهِمُ الصَّلٰوةُ وَالسَّلَام சுன்னத் என்று கூறப்பட்டுள்ளது.

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## வாலிபர்களுக்கு நல்லுபதேசம்

ஹுஜ்ஜதுல் இஸ்லாம் ஹழ்ரத் ஸய்யிதுனா இமாம் முஹம்மத் பின் முஹம்மத் கZஸ்ஸாலி عَلَيْهِ رَحْمَةُ اللّٰهِ الوالى அவர்கள் எழுதுகிறார்கள். ஹழ்ரத் மன்ஸூர் பின் அம்மார் عَلَيْهِ رَحْمَةُ اللّٰهِ الغفار அவர்கள் வாலிபன் ஒருவனுக்கு நல்லுபதேசம் செய்யும் போது கூறினார்கள். வாலிபனே! உன்னை, உன்னுடைய வாலிபம் ஏமாற்றாமல் இருக்க வேண்டும, எத்தனையோ வாலிபர்கள் அவர்களின் தௌபாவை பிற்படுத்தியும்,

தன்னம்பிக்கையை நீடித்தும், மௌத்தை மறந்தும் இருந்தார்கள். மேலும் நாளைக்கு தௌபா செய்வோம், நாளை மறுநாள் தௌபா செய்வோம் எனக்கூறிக் கொண்டிருந்தார்கள். எதுவரையென்றால், அதே அலட்சியத் தில் இருக்கும்போது மலகுல் மௌத் வந்து விட்டார்கள், அந்த அலட்சியக்காரன் இருளான கப்ரை சென்றடைந் தான். அவனுக்கு சொத்துக்களோ, அடிமைகளோ, பிள்ளைகளோ மேலும் தாய், தந்தையோ பிரயோஜனம் அளிக்கவில்லை.

يَوْمَ لَا يَنْفَعُ مَالٌ وَّلَا بَنُوْنَ ﴿۸۸﴾ اِلَّا مَنْ اَتَى اللّٰهَ بِقَلْبٍ سَلِيْمٍ ﴿۸۹﴾

தர்ஜுமா கன்Zஸுல் ஈமான்: அந்நாளில் செல்வமோ, பிள்ளைகளோ யாதொரு பிரயோஜனமும் அளிக்க மாட்டார் கள். ஆனால் பரிசுத்த உள்ளத்தோடு அல்லாஹ்விடம் வருபவரைத் தவிர. (முகாஷஃபதுல் குலூப், பக்கம் 87)

صَلُّوْا عَلَى الْحَبِيْب　　صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

تُوْبُوْا اِلَى الله　　اَسْتَغْفِرُالله

صَلُّوْا عَلَى الْحَبِيْب　　صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே! மறுமைக்காக தயாராகவும், பாவத்திலிருந்து பாதுகாத்துக் கொள்ளவும்,

நன்மையில் உறுதிப்பாட்டை பெற்றுக்கொள்ளவும் மேலும் தனது வாலிபத்தை மதனி வண்ணத்தில் ஒளிமயமாக்கவும் தஃவதே இஸ்லாமியுடைய மதனி சூழலுடன் நேமமாக இணைந்திருங்கள். சுன்னத்துக்களின் பயிற்சிக்காக நாயகத்தின் ஆஷிகீன்களுடன் மதனி காஃபிலாவில் பயணியுங்கள். மேலும் வெற்றிகரமான வாழ்வை உருவாக்க வும், மறுமையை அழகுபடுத்தவும் மதனி இன்ஆமாத் பிரகாரம் அமல் செய்து, தினமும் ஃபிக்ரெ மதீனா (மதனி சிந்தனை) மூலம் மதனி இன்ஆமாத் ரிஸாலாவை நிரப்பி ஒவ்வொரு மாதமும் தனது பொறுப்புதாரியிடம் ஒப்படைத்து வாருங்கள். சுன்னத்துக்கள் நிறைந்த வாராந்த இஜ்திமாக் களில் கட்டாயம் கலந்து கொள்ளுங்கள்.

தௌபாவில் உறுதி பெறவும், அதைப்பற்றிய விளக்கத்தை அறிந்து கொள்ளவும் தஃவதே இஸ்லாமியின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனாவினால் அச்சிடப்பட்ட 132 பக்கங்கள் அடங்கிய "தௌபா கீ ரிவாயாதோ ஹிகாயாத்" எனும் நூலைப்படியுங்கள். மேலும் காமிலான இறைநேசரின் தோழமையை பெறவும், அறிவு, ஞானத்தின் முத்துக்களை அள்ளிக்கொள்ளவும் மதனி முZஸாகராவில் கலந்து கொள்ளுங்கள். Bபாபுல் மதீனாவுக்கு வெளியே உள்ள இஸ்லாமிய சகோதர, சகோதரிகள் மதனி சேனல் வாயிலாக சமூகமளியுங்கள்.

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## மதனி சேனல் என்றால் என்ன?

தஃவதே இஸ்லாமியின் பதிப்பகமான மக்தBபதுல் மதீனாவினால் அச்சிடப்பட்ட “ஙீபத் கி தபாஹ்காரியான்” எனும் நூலின் 86ஆம் பக்கத்தில் உள்ளது. اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ அல்குர்ஆனையும், சுன்னத்துக்களையும் போதிக்கின்ற அரசியல் சார்பற்ற உலகளாவிய அமைப்பான தஃவதே இஸ்லாமியில் பல துறைகள் உள்ளன. அதன் வாயிலாக உலகத்தில் இஸ்லாத்தின் வசந்தங்களை எத்தி வைக்கப் படுகின்றன. அதில் ஒரு துறை “**மதனி சேனல்**” ஆகும். அதன் வாயிலாக உலகத்தில் எத்தனையோ நாடுகளில் தஃவதே இஸ்லாமி டீ.வி.யின் மூலம் வீடுகளில் நுழைந்து இஸ்லாத்தின் தகவல்களை பரப்புகிறது. **மதனி சேனல்** உலகில் நூற்றுக்கு நூறு வீதம் இஸ்லாமிய போங்கிலுள்ள ஒரு சேனலாகும். அதில் படம், நாடகம், பாட்டு, பெண்களை காண்பித்தல் மேலும் எந்த விதமான இசைகளும் இல்லை.

اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ **மதனி சேனல்** மூலமாக எத்தனையோ காபிர்கள் இஸ்லாத்திற்கு வந்து விட்டதோடு தொழுகையற்ற பலர் தொழுகையை பேணக்கூடியவர்களாக மாறிவிட்டனர். மேலும் எண்ணற்ற பலர் பாவங்களிலிருந்து தௌபா செய்து சுன்னத்தின் பிரகாரம் அமல் செய்ய ஆரம்பித்து விட்டனர். **மதனி சேனலின்** பரகத்தை அறிந்து கொள்வ தற்காக ஒரு மதனி வசந்தத்தை பார்ப்போம். அதாவது ஓர் இஸ்லாமிய சகோதரர் மின்னஞ்சல் (E-MAIL) மூலம் எனக்கு

ஒரு "மதனி வசந்தத்தை" அனுப்பினார். அவர் கூறியவை இதுவாகும். இன்றைய காலம் எவ்வாறென்றால், பேசிக் கொண்டிருக்கும்போது புறம் பேசுவதன் தொடரும் ஆரம்பித்து விடுவதை அதிகமாக விளங்கிக்கொள்ள முடிவதில்லை.

ஒருமுறை ஹைதராபாத் (Bபாபுல் இஸ்லாம், சிந்த்) இல் இருந்து Bபாபுல் மதீனாவுக்கு வந்திருந்த ஓர் இஸ்லாமிய சகோதரர் சில இஸ்லாமிய சகோதரர்களுக்கு முன்னிலை யில் கூறினார். எனது நண்பர் ஒருவர் எனக்கு சொன்னார். அதாவது எனது சகோதரி மிகவும் கோப தன்மையுடைய வள். எப்போதாவது ஒருவருடன் கோபித்தால் அவள் தானாகவே அவரை சந்திப்பதில் முந்திக்கொள்ள மாட்டாள். எனது மதனிக்கும், சகோதரிக்கும் இடையில் சில விடயத் தில் மனக்கசப்பு ஏற்பட்டு சகோதரி பேச்சு வார்த்தையை நிறுத்தி விட்டாள், எதிர்பாராமல் அன்றிரவு நூற்றுக்கு நூறு வீதம் எல்லோரும் விரும்பக்கூடிய தஃவதே இஸ்லாமியின் மதனி சேனலில் "மதனி முZஸாகரா" ஒளிபரப்பப்பட்டது. அதில் புறம் பேசுவதன் அழிவுகளிலிருந்து தவிர்ந்து நடப்பதற்கான சிந்தனை வழங்கப்பட்டது. எனது சகோதரி அந்த மதனி முZஸாகராவை கேட்டதும், اَلْحَمْدُ لِلّٰه عَزَّوَجَلَّ கோபத்தின்போது யாருடனும் பேசாத என்னுடைய அந்த சகோதரி, முந்திக்கொண்டு எனது மதனியை சந்தித்தது மட்டுமல்லாமல், மன்னிப்பும் கேட்டதோடு இருவரும் சமாதானமாகியும் விட்டார்கள்.

பாட்டு கூத்து, படங்களை விட்டும் இச்சேனல் சுத்தமானது
மதனி சேனல் உண்மையை சொல்வதிலும் அச்சமற்றது

மதனி சேனலில் நபியின் சுன்னத்துகளின் ஆரவாரமுள்ளது
சபிக்கப்பட்ட ஷைத்தானுக்கு சோகமும் துயரமும் உள்ளது

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

இனிமையான இஸ்லாமிய சகோதரர்களே, பயானை முடிக்கின்ற இந்நேரத்தில் சுன்னத்துக்களின் சிறப்புக்களை யும் மேலும் சில சுன்னத்துக்களையும், ஒழுக்கங்களையும் பயான் செய்யும் பாக்கியத்தை பெறுகிறேன். அகிலத்தின் அதிபதி அண்ணல் நபி صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்கள் கூறினார்கள்: “யார் என் சுன்னாவை நேசிக்கின்றாரோ அவர் என்னை நேசிக்கின்றார், யார் என்னை நேசிக்கின்றாரோ அவர் சுவனத்தில் என்னோடு இருப்பார்.”

(மிஷ்காதுல் மஸாபீஹ், 1/55, ஹதீஸ் 175)

எஜமானாரே! எனதுள்ளம் உங்கள்
சுன்னா வாழும் இல்லமாகட்டும்

சுவனத்தில் அயல்வீட்டாளனாக
தாங்கள் எனை ஆக்க வேண்டும்

صَلُّوْا عَلَى الْحَبِيْب     صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

## "மதீனா சமூகமளியுங்கள்" என்ற 12 எழுத்துகளின் தொடர்பில் வீட்டினுள் நுழைவதும், வெளியேறுவதற்கான 12 மதனி முத்துக்கள்

1. வீட்டை விட்டு வெளியேறும்போது இந்த துஆவை ஓதிக்கொள்ளுங்கள்.

بِسْمِ اللّٰهِ تَـوَكَّلْتُ عَلَى اللّٰهِ لَا حَوْلَ وَلَا قُـوَّةَ اِلَّا بِاللّٰهِ

பொருள்: அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் திருநாமத்தால், நான் அல்லாஹ் عَزَّوَجَلَّ மீது நம்பிக்கை வைத்தேன். அவனிடமிருந்து அன்றி எந்தவொரு சக்தியோ, வல்லமையோ இல்லை.

(சுனன் அபீதாவூத், பாகம் 4, பக்கம் 420, ஹதீஸ் 5095)

اِنْ شَـآءَاللّٰه عَزَّوَجَلَّ இந்த துஆ ஓதுவதன் பரகத்தைக் கொண்டு நீங்கள் நேரான வழியில் இருப்பீர்கள். பேராபத்துக்களை விட்டும் பாதுகாப்புப் பெறுவீர்கள். இன்னும் அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் பேருதவி உங்களுடன் இருக்கும்.

2. வீட்டினுள் நுழையும்போது ஓதும் துஆ இதுவாகும்.

اَللّٰهُمَّ اِنِّيْٓ اَسْأَلُكَ خَيْرَ الْمَوْلَجِ وَخَيْرَ الْمَخْرَجِ بِسْمِ اللّٰهِ
وَلَجْنَا وَبِسْمِ اللّٰهِ خَرَجْنَا وَعَلَى اللّٰهِ رَبِّنَا تَوَكَّلْنَا

பொருள்: யா அல்லாஹ் عَزَّوَجَلَّ (வீட்டுக்கு) வந்து போவதன் நன்மையை நான் உன்னிடத்தில் வேண்டுகின்றேன். நாங்கள் (வீட்டினுள்) அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் திருநாமத்தைக் கொண்டு நுழைகின்றோம். அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் திருநாமத்தைக் கொண்டே வீட்டை விட்டும் வெளியேறுகிறோம். எங்களுடைய ரப்பு அல்லாஹ்عَزَّوَجَلَّவின் மீது நாம் நம்பிக்கை வைக்கின்றோம்.
(சுனன் அபீதாவூத், பாகம் 4, பக்கம் 420, ஹதீஸ் 5096)

இந்த துஆவை ஓதியதன் பிறகு வீட்டில் உள்ளவர்களுக்கு ஸலாம் சொல்லுங்கள். அதன் பிறகு உங்கள் ஸலாத்தை பேரன்பராம் பெருமானார் صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்களுக்கு சமர்பியுங்கள். அதனை தொடர்ந்து சூரதுல் இக்லாஸை ஓதுங்கள். اِنْ شَآءَاللّٰه عَزَّوَجَلَّ உண்ணும் உணவில் மாபெரும் அபிவிருத்தி ஏற்படுவதோடு சண்டை தர்க்கங்களை விட்டும் வீடு பாதுகாக்கப்படும்.

3. தனது வீட்டுக்கு வரும்போதும், போகும்போதும் மஹ்ரமியத்தான ஆண், பெண் (உதாரணமாக உங்களின் தாய், தந்தை, சகோதர, சகோதரிகள், மனைவி, குழந்தைகள் போன்றோர்) களுக்கு ஸலாம் சொல்லுங்கள்.

4. ஒருவர் வீட்டினுள் அல்லாஹ் عَزَّوَجَلَّ வின் திருநாமத்தை உதாரணமாக بِسْمِ اللّٰهِ கூறாமல் நுழைவாரேயானால் அவருடன் ஷைத்தானும் நுழைகின்றான்.

5. ஒருவரும் இல்லாத வீட்டினுள் (அது உங்களின் சொந்த வீடாக இருந்தாலும்) நுழையும்போது இப்படி சொல்லுங்கள்.

اَلسَّلَامُ عَلَيْنَا وَعَلٰى عِبَادِ اللّٰهِ الصّٰلِحِيْنَ

(அதாவது: எம்மீதும், அல்லாஹ்வின் நல்லடியார்கள் மீதும் ஸலாம் உண்டாவதாக)

மலக்குமார்கள் இந்த ஸலாத்திற்கு பதில் கூறுவார்கள். (ரத்துல் முஹ்தார், பாகம் 9, பக்கம் 682) அல்லது இவ்வாறு கூறுங்கள்.

اَلسَّلَامُ عَلَيْكَ اَيُّهَا النَّبِيُّ

நபிபெருமானாரே صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم உங்கள் மீது ஸலாம் உண்டாகட்டும்.

ஏனெனில் உத்தம நபி صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلَيْهِ وَاٰلِهٖ وَسَلَّم அன்னவர்களின் பரிசுத்தமும், பேரருளும் பெற்ற ரூஹ் முஸ்லிம்களின் வீடுகளில் சமூகமளிக்கிறது.

(ஷரஹுஷ் ஷிபா லில்காரி, பாகம் 2, பக்கம் 118)

6. வேறொருவரின் வீட்டினுள் நுழையும் தேவை ஏற்படுமாயின் اَلسَّلَامُ عَلَيْكُمْ "நான் உள்ளே வரலாமா?" என்று கேட்க வேண்டும்.

7. உள்ளே நுழைவதற்கு அனுமதி மறுக்கப்பட்டால் எத்தகைய மனவேதனையும் கொள்ளாது மனமகிழ்ச்சி யுடன் திரும்பி விடுங்கள். ஏனெனில் அவ்வீட்டிலிருப் பவர்கள் ஏதாவது ஒரு காரணத்தால் அனுமதி வழங்காமல் இருந்திருக்கலாம்.

8. யாராவது உங்கள் வீட்டுக் கதவை தட்டினால், 'யார்' என்று கேட்பது சுன்னத்தாகும். தட்டியவர் தன் பெயரைச் சொல்ல வேண்டும். உதாரணமாக “முஹம்மத் இல்யாஸ்” அதற்கு மாறாக “மதீனா” “நான்தான்” “கதவைத் திறவுங்கள்” என்றெல்லாம் சொல்வது சுன்னத்தல்ல.

9. உங்கள் பெயரை கூறிய பின் ஒரு பக்கம் ஒதுங்கி நின்றுக்கொள்ளுங்கள். அதனால் கதவு திறந்தவுடன் உங்கள் பார்வை வீட்டுக்குள் படாது.

10. இன்னொருவரின் வீட்டினுள் எட்டிப் பார்ப்பது தடுக்கப் பட்ட விடயமாகும். சில மனிதர்களின் வீடுகளுக்கு முன்னால் நின்று பார்க்கும்போது மற்றவர்களின் வீடுகள் பள்ளத்தில் இருக்கும். ஆகவே அவர்கள் மிகவும் கவனமாக நடந்துக்கொள்வது அவசியமாகும்.

11. இன்னொருவரின் வீட்டை ஒழுங்கு படுத்தியிருக்கும் முறைகளை பற்றிய குறைநிறைகளை தேவையின்றி

அவர்களுடன் பேசவேண்டாம். அதனால் அவர்களின் உள்ளம் வேதனைப்படலாம்.

12. வீட்டை விட்டு வெளியே வரும்போது வீட்டிலுள்ளவர்களுக்கு துஆ செய்வதுடன் நன்றி கூறி ஸலாமும் சொல்லுங்கள். மேலும் முடியுமானால் சுன்னத்துக்கள் நிறைந்த சிறுநூலை பரிசாகக் கொடுப்பதற்கு முயற்சி செய்யுங்கள்.

ஆயிரக்கணக்கான சுன்னாக்களை கற்பதற்கு மக்தBபதுல் மதீனாவினால் அச்சிடப்பட்ட இரு நூற்களான “பஹாரே ஷரீஅத்” 16ஆம் பாகம் (312 பக்கங்கள்) மற்றும் 120 பக்கங்கள் அடங்கிய “சுன்னதே ஓர் ஆDதாப்” ஆகிய நூற்களை வாங்கிப்படியுங்கள். சுன்னாக்களின் பயிற்சிக்காக எமது நேசர் நபி பெருமானாரின் ஆஷிகீன்களுடன் தஃவதே இஸ்லாமியின் மதனி காபிலாக்களில் பயணித்தலும் ஒரு சிறந்த வழியாகும்.

சுன்னாக்களை கற்பதற்கு காஃபிலாவில் பயணியுங்கள்
கருணையை அடைவதற்கு காஃபிலாவில் பயணியுங்கள்

கஷ்டங்கள் இலேசாகும் காஃபிலாவில் பயணியுங்கள்
பரகத்களை பெற்றுக்கொள்ள காஃபிலாவில் பயணியுங்கள்

صَلُّوْا عَلَى الْحَبِيْب　　صَلَّى اللّٰهُ تَعَالٰى عَلٰى مُحَمَّد

# உள்ளடக்கம்

اَلْحَمْدُ لِلّٰهِ رَبِّ الْعٰلَمِیْنَ وَالصَّلٰوةُ وَالسَّلَامُ عَلٰی سَیِّدِ الْمُرْسَلِیْنَ اَمَّا بَعْدُ فَاَعُوْذُ بِاللّٰهِ مِنَ الشَّیْطٰنِ الرَّجِیْمِ ط بِسْمِ اللّٰهِ الرَّحْمٰنِ الرَّحِیْمِ ط

## நல்ல தொழுகையாளியாக ஆகுவதற்காக

ஒவ்வொரு வியாழக்கிழமையும் மஃரிப் தொழுகையை தொடர்ந்து உங்கள் பிரதேசத்தில் நடைபெறுகின்ற **தஃவதே இஸ்லாமியின்** ஸுன்னத்துக்கள் நிறைந்த வாராந்த இஜ்திமாவில் இறைவனின் திருப்பொருத்தத்திற்காக நல்ல நல்ல எண்ணங்களுடன் முழு இரவையும் கழியுங்கள் ❊ ஸுன்னத்துக்களின் பயிற்சிக்காக **மதனி காஃபிலாவில்** நாயகத்தின் ஆஷிகீன்களுடன் மாதாந்தம் மூன்று நாட்கள் பிரயாணமும் மேலும் ❊ தினமும் **“ஃபிக்ரே மதீனா”** வின் மூலம் **மதனி இன்ஆமாத்** பதிவேட்டை நிரப்பி ஒவ்வொரு இஸ்லாமிய மாதத்தின் ஆரம்ப பத்து நாட்களுக்குள் உங்கள் பிரதேச பொறுப்புதாரியிடம் ஒப்படைக்கும் பழக்கத்தையும் ஏற்படுத்திக் கொள்ளுங்கள்.

**எனது மதனி நோக்கம்:** “நான் என்னையும், உலக மக்கள் அனைவரையும் சீர்த்திருத்துவதற்காக முயற்சி செய்வேன்” اِنْ شَاءَ اللّٰه عَزَّوَجَلَّ.

தனது சீர்த்திருத்தத்திற்காக **“மதனி இன்ஆமாத்”** பிரகாரம் அமலும் மேலும் உலக மக்களுடைய சீர்த்திருத்தத்தின் முயற்சிக்காக **“மதனி காஃபிலா”**வில் பிரயாணமும் செய்ய வேண்டும். اِنْ شَاءَ اللّٰه عَزَّوَجَلَّ.





www.dawateislami.net

ISBN 978-969-631-571-1

0125355

MC 1286

Aalami Madani Markaz, Faizan-e-Madinah, Mahallah Saudagaran
Purani Sabzi Mandi, Bab-ul-Madinah, Karachi, Pakistan.
UAN: +92 21 111 25 26 92 | Ext: 1262
Web: www.dawateislami.net | E-mail: translation@dawateislami.net